4 பக்கங்கள் 25 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 8—4—75 (செவ்வாய்) மலர்: 57

## சோவியத்தில் தானிய உற்பத்தி 7 கோடி டன் உயர்வு

சோவியத் நாட்டில் கடந்த 10 ஆண்டுகளில் விவசாய வளர்ச்சி தீவிரமடைந்துள்ளது. தானிய அறுவடை 7 கோடி டன்னுக்கு மேலும் பருத்தி அறுவடை 28 லட்சம் டன்னுக்கு மேலும் அதிகரித்துள்ளது.

ரசாயன உரங்களின் உற்பத்தி — வேறு எந்த நாட்டையும்விட பல மடங்கு அதிகரித்து உள்ளது, டிராக்டர்களின் தொகை 50 லட்சமும் லாரிகளின் தொகை 16 லட்சமும், அறுவடை எந்திரங்களின் தொகை 9 லட்சமும் அதிகரித்துள்ளன.

இந்தக்காலத்தில் நாட்டின் தெற்குப் பகுதியில் உள்ள பல லட்சம் ஹெக்டர் வறண்ட நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டன.

## தமிழகத்தில் மின் வெட்டு 75 சதவீதமாக உயர்வு

சென்னை, ஏப். 5—

தமிழ்நாட்டில் தற்போது அமுலாக்கப்பட்டிருக்கும் 60 சத வீத மின்சார வெட்டு 75 சதவீதமாக அதிகரித்தது. இதனால் தொழில், வர்த்தகத்துறைகள் பெரிதும் பாதிக்கப்பட்டு இலட்சக்கணக்கான தொழிலாளர்களும் அவர்தம் குடும்பங்களும் பெரும் துயரத்திற்கும் கஷ்டத்துக்கும் ஆளாகும் நிலைமை ஏற்பட்டுள்ளது.

## கூட்டம் நடத்தாதபடி தடுத்தனர், பேசவிடாமல் விரட்டினர்

## காங்கிரஸ் — வலது கம்யூனிஸ்ட் குண்டர்களின் வெறியாட்டம்

# கல்கத்தாவில் ஜெயப்பிரகாஷ் மீது தாக்குதல்

## மார்க்சிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக் குழு கண்டனம்

சென்னை, ஏப். 6 —

**ஜெயப்பிரகாஷ்நாராயணனையும் அவருடன் சென்ற பல தலைவர்களையும் கல்கத்தா நகரில் காங்கிரஸ் குண்டர்கள் மிருகத்தனமாகத் தாக்கியுள்ளதை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழு வன்மையாகக் கண்டித்துள்ளது.**

பல்லாயிரக்கணக்கான போலீஸார் புடைசூழ்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க — லட்சோப லட்சக்கணக்கான மக்களின் செல்வாக்கு பெற்ற ஒரு தலைவரை காங்கிரஸ் ரௌடிகள் தாக்கி, கூட்டத்தில் பேசவிடாதபடிச் செய்திருக்கிறார்களென்றால், இதைக்காட்டிலும் அக்கிரமம் அநியாயம் வேறு ஏதேனும் இருக்க முடியுமா?

கூட்டம்கூடும் உரிமை, பேச்சுரிமை போன்ற சாதாரண பிரஜா உரிமைகளைக்கூட பறிக்கின்ற கொடுங்கோலர்களிடமிருந்து, ஜனநாயகத்தைப் பாதுகாக்க ஆர்வமுள்ள அனைத்து சக்திகளும் ஒன்றுபட்டு நிற்க வேண்டுமென்றும் தமிழ் மநிலக்குழு வேண்டுகோள் விடுத்துள்ளது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் கூட்டம் சென்னையில் நடைபெற்றுக்கொண்டிருந்தபோது, கல்கத்தாவில் ஜெயப்பிரகாஷ் நாராயணனையும் அவருடன் சென்ற தலைவர்கள் பலரையும் காங்கிரஸ் குண்டர்கள் தாக்கிவிட்டார்கள் என்ற செய்தியைக்கேள்விபட்டதும். இந்த அட்டூழியத்தைக்கண்டித்து பின்வரும் தீர்மானத்தை நிறைவேற்றினார்கள்.

### ஜே. பி. மீது தாக்குதல் மாநிலக்குழு கண்டனம்

"ஜெயப்பிரகாஷ் நாராயணனும் அவருடன் சென்ற தலைவர்களும் கல்கத்தாவில் காங்கிரஸ்-வலது கம்யூனிஸ்ட் குண்டர்களால் தாக்கப்பட்ட செய்தி கேட்டு, மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு அதிர்ச்சியடைந்தது. அவர் பேசுவதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கட்டிடத்தை ஒரு காங்கிரஸ் மந்திரியின் தலைமையில் சத்திரபரிஷத்-யுவகாங்கிரஸ் குண்டர்கள் ஆக்கிரமித்துக்கொண்டனர். அதை மேற்கு வங்க போலீஸார் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அந்த மந்திரியின் தலைமையில் இந்தக் குண்டர்படை சரமாரியாகக் கல்வீச்சு நடத்தி ஜே. பி. ஆதரவாளர்களைத் தாக்கியுள்ளது.

ஜே. பி. யின் கார் வந்து நின்றதும், அதனைச் சூழ்ந்து கொண்டு தடியால் தாக்கி சேதப்படுத்தினார்கள்.

இந்தத்தாக்குதலில் நாடாளு மன்ற உறுப்பினர் சமர்குஹாவும் மற்றும் பல தலைவர்களும் படுகாய முற்றனர்.

ஒரு மந்திரியின் தலைமையில் இவ்வளவு அக்ரமங்களும் நடக்கும்போது, போலீஸார் தலையிடாமல் இருந்ததுடன். ஜேபியை அப்புறப்படுத்தி கூட்டத்தில் பேசவிடாமல் தடுப்பதில் மட்டும் அக்கறை காட்டியுள்ளனர். இந்த அநீதியை கண்டிக்க போதிய வார்த்தைகளே இல்லை.

சென்ற நான்கு ஆண்டுகளுக்குமேலாகவே, மேற்கு வங்கத்தில் காங்கிரஸ் ஆட்சி இப்படிப்பட்ட பாசிஸ்ட் போக்கில் நடந்து கொண்டு வருகிறது என்று மார்க்சிஸ்ட் கட்சி தொடர்ச்சியாக எடுத்துக் கூறிவந்தது எவ்வளவு உண்மை என்பதை இந்த நிகழ்ச்சி பளிச்சென நாட்டு மக்களுக்கு விளக்கிவிட்டது.

மேற்கு வங்கத்தில் நிலவும் இந்த பாசிஸ்ட் பயங்கரத்தைத் தடுத்து நிறுத்தாவிட்டால், இந்த பாசிஸ்ட் பயங்கரம் நாடு முழுவதும் விஸ்தரிக்கப்படும் அபாயம் உள்ளது என்று மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு நாட்டு மக்களை எச்சரிக்கிறது.

எனவே, சாமான்யமான பிரஜா உரிமைகளுக்குக்கூட ஆபத்து நேரிட்டிருக்கும் இச்சமயத்தில், பிரஜா உரிமைகள் பாதுகாக்கப்படுவதில் ஆர்வமுள்ள அனைத்து சக்திகளும் — கட்சி வேறுபாடின்றி — ஒன்றுபட்டு நிற்க வேண்டுமென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு கேட்டுக் கொள்ளுகிறது"—என்ற தீர்மானத்தை நிறைவேற்றினார்கள்.

### பி. ராமமூர்த்தி கண்டனம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி விடுத்த கண்டன அறிக்கையில், 'இதுவரையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியினர் மீதும் இதர இடதுசாரி கட்சியினர் மீதும் மாத்திரமே மேற்கு வங்க சத்திர பரிஷத் குண்டர்களும், இளைஞர் காங்கிரஸ் குண்டர்களும் தாக்குதலை தொடுத்து வந்தனர். இவர்களின் தாக்குதல்களால் மார்க்சிஸ்ட் கட்சியைச்சேர்ந்த 1000 ஊழியர்கள் உயிரிழந்திருக்கிறார்கள்.

இப்பொழுது இந்தக் குண்டர்கள் காங்கிரஸ் ஆட்சியை எதிர்ப்பவர்கள் யாரானாலும் அவர்கள் மீதும் தாக்குதல் தொடுக்க முற்பட்டுள்ளார்கள்.

பிரஜா உரிமைகளைப் பாதுகாப்பதில் ஆர்வமுள்ள அனைவரும் ஒன்று சேர்ந்து இந்த அக்ரமத்துக்கு முடிவுகட்ட முன்வர வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டுள்ளார்.

கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் ஜோதிபாசுவும் கண்டித்து அறிக்கை விடுத்துள்ளார்.

### ஜெயப்பிரகாசை கொல்ல முயற்சி

கல்கத்தா தாக்குதல் பற்றி ஜெயப்பிரகாஷ்நாராயணன் பத்திரிகை நிருபர்களிடம் கூறுகையில்,

"காங்கிரஸ் குண்டர்களும் வலதுகம்யூனிஸ்ட் குண்டர்களும் என் காரைவளைத்துக்கொண்டு தாக்கினார்கள் என்னை அடிக்கவும் கொல்லவும் செய்திருப்பார்கள் நான் கல்கத்தாவுக்கு வந்தபோது எங்குபார்த்தாலும் போலீஸ்படை நிறுத்தப்பட்டிருந்தது. இவ்வளவு படை இருந்தும்எனக்குமகான் பேச இருந்த கூட்டத்துக்கும் பாதுகாப்பு கொடுக்கவில்லை.

இந்த காங்கிரஸ் வலது கம்யூனிஸ்ட் பாசிஸ்ட் பேபாயத்தை மேற்கு வங்க மக்கள் தலைகுனிந்து ஏற்றுக்கொள்ளாமல் எதிர்த்துப் போராடுவார்கள் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு.

கல்கத்தா பல்கலைக் கழகம் முன்னால் நடைபெற்ற வெறியாட்டத்தில் மத்திய அரசும் மேற்கு வங்க அரசும் பங்கு கொள்ளவில்லை என்பதை நிருபிக்க வேண்டும்.

என்னை பல்கலைக்கழகத்தில் பேச வேண்டுமென்று அழைக்க மாணவர்கள், வாலிபர்களின் எண்ணிக்கையானது, எனக்கு எதிராக வெறியாட்டமாடிய கத்திகளும் தடிகளும் ஏந்திய குண்டர்களின் எண்ணிக்கையைவிட பலமடங்கு அதிகம் என்பதை நான் அறிவேன்'' என்றார்.

### குண்டர்களை ஒழிப்பதே முதற்பெரும் கடமை

ஜேபி மேலும் பேசுகையில், "இந்த மேற்கு வங்கத்தில் ஜனநாயகம் காப்பாற்றப்பட வேண்டுமானால், இங்கு நாகரீகமான வாழ்க்கைக்கு உத்தரவாதம் ஏற்பட வேண்டுமானால்—ஒரு புதிய சமூக அமைப்புக்கான முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால—காங்கிரஸ்—வலது கம்யூனிஸ்ட் குண்டர்களின் சக்தியை உடைத்து நொறுக்குவதுதான் முதற்பெரும் கடமையாகும்.

மேற்கு வங்கத்தில் சகல மாணவர், வாலிபர் ஸ்தாபனங்களும் சீக்கிரமே ஒரு மேற்குவங்க மாநில மாணவர் மாநாட்டைக் கூட்டுங்கள். இந்த மார்ச் கடைசியிலோ அல்லது ஏப்ரல் ஆரம்பத்திலோ கட்டாயம வருவேன். இந்த காங்கிரஸ் - வலது கம்யூனிஸ்ட் குண்டர்களின் வெறியாட்டத்தை ஒரு கைபார்த்து விடுவோம்''—என்றார்.

### பேசாமல் வந்தது ஏன்?

கூட்டத்தில் பேசாமல் திரும்பி விட்டது ஏன் என்று கேட்கப்பட்ட கேள்விக்கு ஜேபி பதில் அளித்தார்.

"நான் பேசியிருந்தால், என்னை குண்டர்கள் அடித்திருப்பார்கள். குண்டர்கள் கத்திகளையும் இரும்புத் தடிகளையும் வைத்திருந்தார்கள். வண்டி வண்டியாக போலீஸ் இருந்தும் குண்டர்களை அகற்றவரவில்லை. அதனால்தான் பேசாமல் வந்துவிட்டேன்.

இனி மேற்குவங்க மாணவர்களும் வாலிபர்களும் சகல தயாரிப்புகளுடன் மாநாடு நடத்த வேண்டும். அப்போது குண்டர்கள் நடத்தும் வெறியாட்டத்துக்கு எப்படி பதில்கொடுப்பது என்பது நமக்கு தெரியும்''— என்றார்.

### காங்கிரஸ் மகிழ்ச்சி

ஜெயப்பிரகாஷ் மீது நடந்த தாக்குதலை எதிர்க்கட்சிகளெல்லாம் கண்டிக்கும் போது, காங்கிரஸ்வட்டாரத்திலும் வலது கம்யூனிஸ்ட் வட்டாரத்திலும் 'மாணவர்களும் இளைஞர்களும் அமைதியான முறையில் ஆர்ப்பாட்டம்செய்தும் ஜெயப்பிரகாசரை விரட்டிவிட்டதாக' மகிழ்ச்சி தெரிவித்தார்கள்.

### கட்டாக்நகரில் தாக்கினர்கள்

ஒரிசாவில் சென்ற வாரம் சுற்றுப்பயணம் செய்த போது, கட்டாக் நகரில் 3 மைல் நெடுகிலும ஜெயப்பிரகாசை வரவேற்க கூட்டம் கூடியிருந்தது.

ஆனால் கட்டாக் நகரின் நுழைவாசலிலேயே ஜெபி காரை நிறுத்தி, தடிகளால் காங்கிரஸ் குண்டர்கள் தாக்கினார்கள். ஜெபியின் உதவியாளரும் டிரைவரும் தாக்கப்பட்டு காயமுற்றார்கள் என்றும் 2மணிநேர தாமதத்திற்கு பிறகுதான்மக்களைச் சந்திக்க முடிந்தது என்றும ஜெபி. கூறினார்.

### மார்க்சிஸ்ட் கட்சி முன்பே வலியுறுத்தியது

ஜெயப்பிரகாஷ் தலைமையில் கடந்த மார்ச் 6-ம் தேதியன்று டில்லியில் பேரணி நடத்துவதற்கு முன்னதாக மார்ச் 3ம் தேதியே மார்க்சிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ கூடி ஓர் தீர்மானம் நிறைவேற்றியது.

அதில், 'சுதந்திரமான நேர்மையான தேர்தல் வேண்டும் என்று கோரும்போதே, அதற்கான பயமுற்ற சூழ்நிலை இருக்க வேண்டுமென்பது அவசியமாகும். மேற்கு வங்கத்தில் போலீஸ் பாதுகாப்புடன் ஆயுதமேந்திய குண்டர்கள் வெறியாட்டம ஆடுவதும் அரசாங்க நிர்வாகத்தைப் பயன்படுத்தி 1972-ல மோசடித் தேர்தல் நடத்தியதும் கண்டிக்கப்பட வேண்டும் என்றோம். இது தான் அவசரமாக கவனிக்க வேண்டிய பிரச்னையென்றும் ஜெயபிரகாஷுக்கும் டில்லி பேரணித் தலைவர்களுக்கும் எடுத்துச் சொன்னோம். அதை அவர்கள் அக்கறையோடு எடுத்துக் கொள்ளவில்லை.

அந்தப் பேரணியில் மார்க்சிஸ்ட்கட்சி கலந்து கொள்ளாமல இருந்ததற்கு இதுவும் ஒரு காரணம'' என்று தீர்மானம நிறைவேற்றியிருந்தது.

இப்பொழுது மேற்கு வங்கத்தில் போலீஸ் ஆதரவுடன் ஆயுதமேந்திய ஆளும் கட்சி குண்டர்களின் அட்டகாசத்தை ஜெயபிரகாசரே நேரில் பார்த்துவிட்டபடியால், அவர்களை எதிர்த்துப் போராட இளைஞர் உலகத்துக்கும சகல கட்சியினருக்கும் அறைகூவல் விடுத்துள்ளார்.

## தியூவுக்கு கல்தா கொடுக்க மந்திரிகள், தளபதிகள் தீவிரம்

சைகோன், ஏப். 6—

தென்வியட்நாம் தியூ, இனிமேலும் ஜனாதிபதியாக நீடிக்க வேண்டுமா?—என்ற கேள்வியானது, மேலும் மேலும் அதிக அளவில்எழுப்பப்பட்டு வருகிறது.

தியூவின் ஆட்சியின் கீழ் பணியாற்றும் ராணுவ தளபதிகள் கவுன்சில் கூடி, தியூ ராஜினாமாச் செய்ய வேண்டுமென்று கோரியுள்ளது.

இப்பொழுது தென்வியட்நாம் பிரதம மந்திரியாக உள்ள ட்ரான் தியன்கியமும் மற்றும் மந்திரிசபை முழுவதும், நேரிடையாகவே தியூவிடம் சென்று. 'உடனே ராஜினாமா' செய்யுமாறுவற்புறுத்தியுள்ளனர்.

மந்திரிகளின் அதிகாரிகளும் தியூவை ராஜினாமா செய்யுமாறு நெருக்குகிறார்கள்.

செனேட் சபையினரும் தியூ போக வேண்டுமென்று கூறுகிறார்கள்.

"இந்த தியூ அமெரிக்காவின் பேச்சைக்கேட்டு, பாரிஸ் உடன்பாட்டை, அமுல் நடத்த மறுத்தவன். ஆனபடியால் இவன் இருக்கும் வரை சமரசப் பேச்சுக்கு இடமில்லை''—என்று தென்வியட்நாம் புரட்சி அரசு கூறிவிட்டது.

எந்தச் சமயத்திலும் தியூ ஓடிவிடுவான் என்று தெரிகிறது.

அதற்கு முன் அடையாளமாக, தன் மனைவி உட்பட குடும்பத்தினர் அனைவரையும் தென்வியட்நாமை விட்டு வெளியேற்றி விட்டான்.

## பாசிச அடக்குமுறை தலைவிரித்தாடும் சித்தார்த்த ரே ஆட்சியில் போலீஸ் பட்ஜெட் மேலும் உயருது

கல்கத்தா, ஏப். 6—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மீதும் அதன் வர்க்க ஸ்தாபனங்கள் மீதும் மற்றும் இடதுசாரி ஜனநாயக சக்திகள் மீதும போலீஸ் மற்றும் காங்கிரஸ் குண்டர்களின் பாசிச அடக்குமுறை தொடர்ந்து நடத்திவரும் மேற்கு வங்கமாநிலத்தில்—மோசடித் தேர்தல் மூலம் அரசைக் கைப்பற்றியசித்தார்த்தசங்கர்ரே ஆட்சியில—போலீஸ் பட்ஜெட்டுக்கு மேலும் மேலும் அதிகமாக நிதி ஒதுக்கப்பட்டு வருகிறது.

இதற்கு முன்பு என்றைக்கும் இல்லாத அளவுக்கு இம்மாநிலத்தில் 1975-76 ஆண்டிற்கு போலீஸ் பட்ஜெட் 52 கோடியே 80 லட்சத்து 95 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. மக்கள் நலம்; அமைதி, உடைமையைக் காப்பாற்றுவது. சமூகத்தில் பலாத்காரம், ஊழல் ஒழிப்பு ஆகிய திரைகளின் மறைவில் மாநிலக காங்கிரஸ் அரசு இவ்வாறு பட்ஜெட் ஒதுக்குகிறது.

1974—75-ல் மாநில போலீஸ்பட்ஜெட் 48கோடியே 99 இலட்சத்து 15 ஆயிரம் ரூபாய் ஆகும்.

1952—53 ஆண்டு பட்ஜெட்டோடு 1975—76 பட்ஜெட்டை ஒப்பிட்டால், 49 கோடியே 19 இலட்சத்து 95 ஆயிரம் ரூபாய் அதிகமாகும்.

அதாவது 1952—53-ல் மாநில போலீஸ் பட்ஜெட் 5 கோடியே 71 இலட்சம்தான். 1967—68-ல் 19 கோடியே 87 இலட்சம்தான்.

ரூபாய் எட்டரை கோடி மூலதனம் கொண்ட இரயில்வே கூட்டுறவு நாணயச் சங்க தேர்தல்:

## டி. ஆர். இ. யூ-மஸ்தூர் யூனியன் வெற்றி வலது கம்யூனிஸ்ட்-தி. மு. க. படுதோல்வி

பொன்மலை, ஏப். 5—

இங்கு கடந்த 4-ந் தேதியன்று நடந்த இரயில்வே கூட்டுறவு நாணயச் சங்கத்தின் 6 டைரக்டர்கள் இடங்களுக்கு நடந்த தேர்தலில், சிஐடியூ சங்கமான தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியனும் (டி ஆர் இ யூ) மஸ்தூர் யூனியனும கூட்டாக நிறுத்திய 6 வேட்பாளர்களும மகத்தான வெற்றிபெற்றனர்

இந்த கூட்டுறவு நாணயச்சங்கத்தின் நடைமுறை மூலதன ரூ. 8 1/2 கோடியாகும 52 ஆயிரம் பங்குதாரர்கள் உள்ளனர்.

டி. ஆர். இ. யூ. மஸ்தூர் யூனியன வேட்பாளர்களை எப்படியாகிலும்முறியடித்துவிடவேண்டும் என்பதற்காக தி. மு. க., தி, க. ஐ என் டி யூ சி சார்பான 'சங்' ஆளும் காங்கிரஸ்காரர்கள் அனைவரையும் சேர்த்துக் கொண்டு, ஒற்றுமை அணி என்ற பெயரில் வலது கம்யூனிஸ்டுகள் போட்டியிட்டனர். இந்த ஒற்றுமை அணியில்வட்டிக்கடைக்காரர்கள, ஜாதிவெறியர்கள். கள்ளச் சாராயக்கடைக்காரர்கள் ஆகியோரும் பங்காளிகளாம எவ்வளவோ தகிடுதத்தம போட்டுப்பார்த்தும் கடைசியில் ஒற்றுமை அணி படுதோல்வியையே தழுவியது வெற்றிபெற்ற வேட்பாளர்களும் அவர்கள் பெற்ற வாக்குகளும் (அடைப்புக்குள்) வருமாறு:—

எபநேசர் [4089) என் கணபதி (4643) ஆர் ஸ்ரீதரன் [3864) ஆர் சீனிவாசன (3689] வி சுந்தரமூர்த்தி (3944) பி தாமஸ் (3763)

தோற்ற வேட்பாளர்கள் அதிகபட்சம் 2103 வாக்குகளும குறைந்தபட்சம 1766 வாக்குகளுமே பெற்றனர்.

### பேரவைத் தேர்தலில் பெரு வெற்றி

36 தொகுதிகளைக் கொண்ட இங்சங்கத்தின் பேரவைக்கு நடந்த தேர்தலில டி ஆர் இ யூ —மஸ்தூர் யூனியன கூட்டணி பெருவெற்றியடைந்தது. 28 தொகுதிகளைக் கைப்பற்றியது.

இவர்களில் 9பேர் போட்டியின்றி வெற்றி பெற்றனர். தோல்வியுற்றடிஆர்ஐயூமஸ்தூர் யூனியன்களின கூட்டு வேட்பாளர்கள் 8 பேரும் மிகக் குறைந்த வாக்குகள வித்தியாசத்திலேயே வெற்றி வாய்ப்பை இழந்தனர்.

# தீக்கதிர்

## மூட்டை முடுச்சுகளை சுருட்டி கொண்டு ஓடு!

தென் வியட்நாம் பொம்மை அரசை பொறுத்த வரையில், அது ஒரு செத்துப்போன பிணம். அதை குழியில் புதைக்க வேண்டிய கடைசி வேலைதான் விடுதலைப் படைகளுக்கும் அந்நாட்டு மக்களுக்கும் மிஞ்சியுள்ளது.

ஆனல் அப்பிணத்திற்கு உயிரூட்டும் ஈனத்தனமான காரியத்தில் இறங்க அமெரிக்க ஏகாதிபத்தியம் எத்தனித்துக் கொண்டிருக்கிறது.

உலகில் பிற்போக்கு சக்திகளை நிலைக்கச் செய்ய மக்களை ரத்த வெள்ளத்தில் மூழ்டிக்க ஏகாதிபத்யம் சிஞ்சித்தும் தயங்காது என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டாகும்.

ஏனெனில் ஏகாதிபத்தியம் என்றல் யுத்தம்; ஏகாதிபத்தியம் என்றல் ரத்த வெறி.

அதனுல்தான், தென்வியட்நாமின் பொம்மை அரசு தனது அந்திமக் கட்டத்தை அடைந்து விட்டது என உலக மக்கள் முன்பு உறுதிப்படுத்தப்பட்ட பிறகும், அமெரிக்கா ஜப்பானில் உள்ள தனது ராணுவத்தை உஷார் நிலையில் வைத்துள்ளது.

எனவே, எந்த நேரத்திலும் அமெரிக்க ஏகாதிபத்தியம் தனது ராட்சத தளவாடங்களை தனது துருப்புகளை நேரடியாக இறக்கி, தென்வியட்நாம் மக்கள் மீது ஏவிவிடலாம்.

ஆனல் வரலாறு கண்டிராத வீரமிக்க வியட்நாம் மக்கள் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் 50 ஆயிரம் துருப்புகளை எமலோகத்துக்கு அனுப்பி, பாரிஸ் சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் செய்து தனது 5 லட்சம் ராணுவத்துருப்புகளையும் அமெரிக்காவுக்கு திருப்பி அழைத்து கொள்ள வைத்தனர்.

ஆனலும் ஆயிரக்கணக்கான துருப்புகளையும் யுத்த நிபுணர்களையும் சிவிலியன் வேடத்தில் நிறுத்தி ஒப்பந்தத்தை மீறவே செய்தது. மீறும்படி தியூவுக்கும் தூபம் போட்டது.

அமெரிக்க ஆதரவுத் தைரியத்தில் 1973-ம்ஆண்டு ஜனவரியில் ஏற்பட்ட பாரிஸ் ஒப்பந்தத்தை மிகக்குறுகிய காலத்திலேயே பொம்மை அரசின் தலைவனன தியூ தகர்த்தெறியலானன்

பதுங்கி இருக்கும் புலியை அதன் இருப்பிடத்திலேயிருந்து விரட்டப்போவதாக கொக்கரித்துக் கொண்டே விடுதலைப்படைகளால் ஏற்கனவே விடுதலை செய்த பகுதிகள் மீது கூலிப்படைகளை ஏவிவிட்டான்.

குறிப்பாக 1974-ம் ஆண்டின் ஜனவரி மாதத்தில் மெகாங் நதி டெல்டா பகுதியில் விடுதலைப்படைகளின் முக்கிய பகுதிகள் மீது தாக்குதல் தொடுத்தான்.

தென்வியட்நாமின் புரட்சிப்படைகளுக்கு அனுப்பப்பட்ட அரிசியைத்தடுத்தான்.

தொல்லை அதிகரிக்கவே 74-ம் ஆண்டின் மத்திய காலத்தில் புரட்சிப்படை பதிலடி கொடுக்க ஆரம்பித்து விட்டது.

கடந்த மாதத்துக்கு முன்னதாக பொம்மை அரசின் ஒப்பந்த மீறல்களும் தொல்லையும் அதிகரிக்கவே, விடுதலை முன்னணி ஒரு சபதம் எடுத்தது. சண்டையையே விரும்புகிற தியூ, ஆட்சிபீடத்தில் இருக்கும்வரை சமாதானப் பேச்சுக்கு இடமில்லை என்ற முடிவில் தங்களது இறுதித்தாக்குதலை உறுதியான முறையில் தொடுத்தது.

அதன் விளைவுதான் தீயூ அரசாங்கம்பிணமாகி சவக்குழிக்குள் அடக்கமாகப் போகிறது.

இதுவரலாற்றின் நியதி. காலத்தின் கட்டளை. ஆனல் சரித்திரத்தின சக்கரத்தை பின்னேக்கிச்தள்ளும் வீண் முயற்சியில் அமெரிக்க ஏகாதிபத்தியம் இறங்கியுள்ளது. ஏற்கெனவே வியட்நாம் மக்களிடம்- அடிபட்டு அவமானப்பட்டது. போதாதென்று இன்னும் அவர்களிடம் வேண்டிய மட்டும் வாங்கிக்கட்டிக்கொள்ளப்போகிறது.

தென் வியட்நாம் கடல்களிலும் ஆகாயத்திலும் புரட்சி அரசின் அனுமதி இல்லாமல், அமெரிக்க கப்பல்களும் விமானங்களும் அத்துமீறிப் பிரவேசித்து, தென் வியட்நாம் அரசுரிமையை காலில் போட்டுத் துவைக்கின்றனர்.

அமெரிக்காவின் இந்த அத்துமீறலைக் கண்டித்து புரட்சி அரசு எச்சரிக்கை விடுத்துள்ளது.

தியூ அரசாங்கம் தான் ஏதோ சமாதானத்துக்காகவும், பாரிஸ் உடன்படிக்கையை நிறைவேற்றுவதற்காகவும் இருப்பது போலவும் — புரட்சி அரசும் வடவியட்நாம் அரசும் பலாத்கார வழியைப் பின்பற்றுவதாகவும் அமெரிக்க ஏகாதிபத்யமும் அதன அடிவருடிகளும் பொய்ப் பிரச்சாரம் செய்து வருகிருர்கள்.

ஆனல் உண்மை என்ன? இன்றுவரையும் புரட்சி அரசு வற்புறுத்திவருவது என்ன?

உண்மையிலேயே சமாதானத்தை நேசிக்கக்கூடிய நிர்வாகத்துடன் மட்டுமே—சுதந்திரத்தை நேசிக்கக் கூடிய நிர்வாகத்துடன் மட்டுமே—ஜனநாயகத்தை மதிக்கக்கூடிய நிர்வாகத்துடன் மட்டுமே—தேசீய ஐக்கியத்தை விரும்பக் கூடிய ஒரு நிருவாகத்துடன் மட்டுமே—பாரிஸ் உடன்படிக்கையை மனப்பூர்வமாக அமுல் நடத்தத் தயாராக இருக்கக் கூடிய ஒரு நிர்வாகத்துடன் மட்டுமே, புரட்சி அரசு சமரசம் பேசத் தயாராக இருக்கிறது என்று அறிவித்துள்ளது.

தென்வியட்நாமின் உள்நாட்டுப் பிரச்னைகளை மேலே கண்ட அடிப்படையில் தீர்த்துக் கொள்ளுவதற்கு தியூ லாயக்கில்லாதவன் என்று நிரூபணமாகி விட்டதால அவனைத் தூக்கியெறிய வேண்டுமென்று புரட்சி அரசு கூறுவது முற்றிலும் சரியே.

இந்த நிலையில், அமெரிக்க ஏகாதிபத்திய ஓநாய்கள் தென் வியட்நாமில் காலூன்றிக்கொள்ள சிறிது இடமாவது கிடைக்குமா என்று தலையீடுகளிலும் அத்துமீறல்களிலும் இறங்காமல், மூட்டைமுடுச்சுகளைச் சுருட்டிக் கொண்டு ஓட்டம்பிடித்துவிடுவதுதான் உயிர்தப்பிக்கொள்ள உள்ள ஒரே வழியாகும்

## மக்கள் ஆதரவு உண்டெனில்

# தேர்தலைக் கண்டு நடுக்கம் ஏன்?

## கேரள ஆளும் கூட்டணிக்கு ஏ.கே.ஜி. இடித்துரை

ஆலப்புழை, ஏப். 5— ஐந்து ஆண்டுகால ஆட்சியில் கேரள ஆளும் கூட்டணிக்கு மக்களது ஆதரவு அமோகமாக பெருகியிருக்கிறதென்றல், புதிய தேர்தலை சந்திக்க அதற்கு நடுக்கம் ஏன்?

—இவ்வாறு, தோழர் ஏ.கே. கோபாலன் இடித்துக் கேட்டுள்ளார்.

ஜனநாயகத்தின் மீது கடுகளவாவது மரியாதை வைத்திருப்பார்களேயானல் மானமும் வெட்கமும்— இருக்குமேயானல், இந்திரா காங்கிரஸ் வலது கம்யூனிஸ்ட் கூட்டணி ஆட்சியினர் சட்டமன்றத்தைக் கலைத்துவிட்டு புதியதேர்தலை நடத்தவேண்டும்.

கேரள ஆட்சியாளர்கள் செய்யவேண்டியது இது தான், என்றும் தோழர் ஏ. கே. ஜி. கூறினர்

ஆலப்புழை மாவட்டம் மகமயில் பத்திரிகை நிருபர்களுக்கு தோழர் ஏ, கே. ஜி, பேட்டியளித்தார். அப்போது அவர் மேலும் கூறியதாவது:

ஐந்து ஆண்டுகள் தொடர்ச்சியாக ஆட்சிநடத்தினேம் என்பதை விட, இக்காலம் முழுவதும் எந்த வர்க்கத்தின் நலனுக்காக ஆட்சி நடத்தினேம், என்பதே முக்கியம். மக்களின் அபிலாசைகளை நிறைவேற்றுவதே நாடாளுமன்ற ஜனநாயகத்தின் சாராம்சம்.

கடந்த தேர்தலில் போட்டியிட்ட ஆளும் கூட்டணி கட்சிகளுள் ஒரு கட்சியின் (முஸ்லிம் லீகின்) ஒரு பகுதியினர் அமைச்சரவைக்கு அளித்து வந்த ஆதரவை வாபஸ் பெற்றுக் கொண்டனர். இந்தச் சூழ்நிலையில் ஆளுவதற்கு கூட்டணி அரசுக்கு மக்களிட்ட கட்டளை முடிந்து போனது.

குஜராத்தில் புதிய தேர்தல் நடத்தக் கோரி, மொரார்ஜி தேசாய் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதைத் தோழர் ஏ. கே. ஜி. சுட்டிக் காட்டி பேசுகையில் கூறியதாவது:

குஜராத்தில் 11 ஆண்டுகளாக பஞ்சாயத்துத் தேர்தல்கள் நடக்கவில்லை; கேரளத்தில் 18 வருடங்களாகப் பஞ்சாயத்துத் தேர்தல்கள் நடக்கவில்லை. பாண்டிச்சேரியில் தேர்தல் நடத்தாமல் காலம் தாழ்த்திக் கொண்டே போகிறர்கள். காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்கு ஜனநாயகத்தின் மீது கடுகளவும் விசுவாசம் இல்லை.

இவ்வாறு தோழர் ஏகேஜி கூறினர்.

## மந்திரி மாளவியாவுக்கும் கல்தா கொடுப்பார்கள்?

புதுடெல்லி, ஏப். 5— நாட்டை வருத்திக் கொண்டிருக்கும் முக்கியமான பிரச்னைகளைப்பற்றி ஜெயப்பிரகாஷ் நாராயணனுடனும் இதர எதிர்க்கட்சிகளின் தலைவர்களுடனும் கலந்து பிரதமர் இந்திரா காந்தி பேசவேண்டுமென்று வற்புறுத்தினர் மந்திரி மோகன் தாரியா.

மந்திரி சபையிலிருந்து அவருக்கு கல்தா கிடைத்தது.

இப்பொழுது பெட்ரோலிய மந்திரி கே. டி. மாளவியாவும் முன்வந்து, இந்திரா—ஜே. பி. சந்திப்பு ஏற்பட வேண்டுமென்று வற்புறுத்துகிறர்.

தாரியாவுக்கு கிடைத்த கல்தா தான் மாளவியாவுக்கும் கிடைக்குமென்பதில் சந்தேகமில்லை.

மற்றும் காங்கிரஸ் காரியக்கமிட்டி உறுப்பினரான சந்திர சேகரும், இந்திரா— ஜே. பி. சந்திப்பு வேண்டும் என்று வற்புறுத்துவதால், அவரை காரியக் கமிட்டியிலிருந்து கல்தா கொடுக்க வேண்டுமென்று சசிபூஷண் என்ற காங்கிரஸ் எம். பி., காங்கிரஸ் தலைவர் டி. கே. பருவாவுக்குக் கடிதம் எழுதியிருக்கிறர்.

இவ்வாருக, ஆளும் காங்கிரசுக்குள் அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டு, ஒழுங்கு நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுவருகின்றன.

## ஏழை விவசாயிக்கு எதிராக இந்திரா காங்கிரஸ் சகுனி வேலை

விளாத்திகுளம், ஏப் 4— நெல்லை மாவட்டம் விளாத்திகுளம் வட்டாரத்தில் சமலாபுரம் வட்டாரத்தில் நில வெளியேற்றத்தை எதிர்த்து வரும் ஏழை விவசாயிகளை நக்சல்பாரிகள் என்று இவ்வூரைச் சார்ந்த இந்திரா காங்கிரஸ் பிரமுகர் போலீசில் புகார் கொடுத்தாராம்.

இக்கிராமத்தில் சண்மாயப் புறப்போக்கை நிலமில்லா ஏழை விவசாயிகள் நிலம் கூட்டிபாசனம் செய்து வருகிருர்கள். இவர்களை வெளியேற்ற பலர் பல்வேறு முயற்சிகளில் ஈடுபட்டனர். இதில் பஞ்சாயத்து தலைவர் விளாத்திகுளம் பஞ்சாயத்து யூனியன் உதவித் தலைவர், இந்திரா காங்கிரஸ் பிரமுகர் 400 ஏக்கருக்கு அதிபதியான கந்தசாமி என்பவர் இதில் முன்னணியில் நின்ருராம்.

தண்டத் தீர்வையுடன் நிலத்தை அனுபவித்து வரும் விவசாயிகள் சங்கத் தோழர்கள் முத்து, முத்தலாப்பன் உட்பட பலரை வெளியேற்றும்நோக்குடன் போலீசில் பொய்ப் புகாரும் கொடுத்தாராம். மேலும் அந்தப் புகாரில் இந்த விவசாயிகளை நக்சல்பாரிகள் என்று குறிப்பிட்டுள்ளாராம்.

ஆனல், வாலிபர் முன்னணித் தலைவர்களும், விவசாயிகள் சங்கத் தலைவர்களும தலையிட்டு பொய்க் கேசை முறியடித்து—ஏழை விவசாயிகள் தொடர்ந்து விவசாயம் செய்ய வழிவகுத்துள்ளனர்.

## பம்பாயில்

## ஆதிவாசிகள் ஊர்வலம்

பம்பாய், ஏப். 3— இன்று மகாராஷ்டிர சட்டமன்றத்தை நோக்கி ஆதிவாசி மக்களும் நிலையற்ற விவசாயத் தொழிலாளிகளும் ஊர்வலமாக வந்ததையொட்டி இன்று சட்டமன்றம் ஒத்தி வைக்கப் பட்டது.

ஆதிவாசி மக்களை நிலத்தை விட்டு கட்டாய வெளியேற்றம் செய்வதைக் கண்டித்தும கிராமப்புறங்களில் பற்றுக்குறையான உணவுப் பொருட்களைசப்ளை செய்வதைக் கண்டித்தும் விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த படச சம்பளம கோரியுமே ஆதிவாசி மக்களும் கிராமப்புற விவசாயத் தொழிலாளர்களும் இவ்வூர்வலததை சட்டமன்றம் வரை நடத்தினர்.

இவ்வூர்வலம் வருவதையொட்டி எதிர்க்கட்சி உறுப்பினர்கள் ஒத்திவைப்பு தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தனர். ஆனல் அத் தீர்மானம் ஏற்கப்படவில்லை. இதனல் சட்டசபையில் இரு தடவை கூச்சலும் எதிர்க் கூச்சலும் கிளம்பின.

இதனல் சபாநாயகர் சட்டமன்றததையேஒத்திவைத்து விட்டார்.

ஆனல், எதிர்க்கட்சியினர் மகாராஷ்டிர மாநில முதலமைச்சரை கடுமையாக வற்புறுத்தி, ஆதிவாசி மக்களின், விவசாயத் தொழிலாளர்களின் பிரச்சினைகள மீது அறிக்கை சமர்ப்பிக்க ஒப்புக்கொள்ளச் செய்தனர்.

## உண்ணுவிரதம்

கீரனூர், ஏப். 1— வறட்சி நிவாரணப் பணிகளைத் துரிதப்படுத்தக் கோரியும், சாவியான பயிர்களுக்கு நஷ்டஈடு கோரியும் புதுக்கோட்டை மாவட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, விவசாயிகள் சங்கம் ஆகியவற்றின் சார்பில் உண்ணுவிரத கிளர்ச்சிகள் நடந்தன. கீரனூர் பஸ் நிலையம் முன்பு ஏ. கிருஷ்ணன் தலைமையிலும் கிள்ளுக்கோட்டை அஞ்சலகம் முன்பு கே ஆரோக்கியசாமி தலைமையில் மூவரும், குன்னுண்டார் கோவில் ஊராட்சி ஒன்றிய அலுவலகம் முன்பு ரெங்கசாமி தலைமையில் மூவரும் உண்ணுவிரதம் மேற்கொண்டனர்.

இதற்கு முன்பு மாவட்ட வறட்சி மாநாடும், கலெக்டரிடம் கோரிக்கைகள் அளித்தல ஆகிய நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் பட்டன.

### அவினுசி

கோவைமாவட்டம் அவினுசி நகரத்தில்,

அவநாசியப்பன்தலைமையிலும, ஏ. எஸ். பொன்னுச்சாமி தலைமையிலும் தலா 5 பேர் வீதம் உண்ணுவிரதம் இருந்தனர்.

மாலையில் ஏ. எஸ். பொன்னுச்சாமி தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் கோவை— நீலகிரி மாவட்ட சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி செயலாளர் கே, சி. கருணுகரன், பல்லடம் தாலுகா மார்க்சிஸ்ட் கமயூனிஸ்டகட்சி செயலாளர் கே. எஸ். கருப்புசாமி, என். சீனிவாசன், எஸ்.அருணுசலம் கோரிக்கைகளை விளக்கிப்பேசினர்.

## 93 அதிமுக் தொழிலாளர் விலகல்

## சி.ஐ.டி.யூ.வில் சேர்ந்தனர்

மூணுறு, மார்ச். 31— கேரள மாநிலம் மூணுறு பகுதியில், தலைவர்களும், தொழிலாளர்களுமாக 93 பேர் அதிமுக தொழிற் சங்கத்திலிருந்து விலகி சிஐடியூ சங்கத்தில் சேர்ந்தனர்.

இவர்கள் இருட்டளையில் உள்ள அதிமுக சங்கமான டி இ இ யூனியனில் இருந்தவர்கள் சி கே சேவியர் எஸ்டேட, வாசுதேவ சிங் எஸ்டேட், சுப்புசிங்எஸ்டேட், ஏ பெருமாள்நாடார் எஸ்டேட், ஐ சி. குரியன் எஸ்டேட், ரோஸ்குட்டி எஸ்டேட், தோத்தாராம்சிங் எஸ்டேட், தனராஜ்சிங் எஸ்டேட், பிலாத்கோட்டம் (மாணிகுஞ்சு) வி பி பெரிய கருப்பத்தேவர் எஸ்டேட் ஏ சீனிவாசன் (சீனியம்மாள்)எஸ்டேட் ஆகிய ஏலத் கோட்டங்களில் வேலை பார்த்து வருபவர்கள்-

இவர்கள் தங்களது நலன்களைக் காக்கும் என்று கருதி இந்த அதிமுக சங்கத்திதில் சேர்ந்து உறுப்பினர்களாயினர் ஆனல் இச்சங்கத்தின் பொதுச் செயலாளரான ஜே. வர்க்கீஸ் என்பவர், அத் தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய நியாயமான சலுகைகளை வாங்கித் தராமல் முதலாளிகளுக்கு காட்டிக் கொடுத்தும் தொழிலாளர்களுக்கு துரோகம் செய்தும் வருவதைக் கண்டு பெண்கள் உட்பட 93 தொழிலாளர்கள் அச்சங்கத்தின் செயலாளர் கே. எஸ். மணியன் தலைமையில் அச்சங்கத்திலிநந்து விலகி தொழிலாளி வர்க்கத்தின் போர்க்குணமிக்க ஸ்தாபனமான சிஐடியூ வில் சேர்ந்து செயல்பட்டு வருகின்றனர்.

## முறைகேடான பதவி உயர்வு

## ஆசிரியர் கூட்டணி உண்ணுவிரத எச்சரிக்கை

திருப்பூர், ஏப். 3— இடைநிலை தேர்வு பெற்ற ஆசிரியர்களுக்கு முன்னுரிமைப்படி பதவி உயர்வு வழங்க வேண்டும் என்றும் அவ்வாறு ஏப்.10க்குள் வழங்காவிடில் திருப்பூர் நகராட்சி அலுவலகம் முன்பு உண்ணுவிரதக் கிளர்ச்சி நடத்துவது என்றும நகர ஆசிரியர் கூட்டணி தீர்மானித்துள்ளது.

அண்மையில் கிளைத் தலைவர் எஸ் தண்டபாணி தலைமையில் நடந்த கூட்டணியின் கூட்டத்தில் இம்முடிவு எடுக்கப்பட்டது.

இடைநிலை கேறி, இளநிலையில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு, இடைநிலை ஆசிரியர் பதவி உயர்வு வழங்க அவர்கள் பணியில் சேர்ந்த காலத்திலிருந்து கணக்கிட்டு முன்னுரிமைப்படி 1.6.74 முதல் பதவி உயர்வு வழங்க அரசாணை வகை செய்துள்ளது.

ஆனல், திருப்பூர் நகராட்சியின் சில பள்ளிகளில் — அரசாணைக்குப் புறம்பாக 1974 ஏப்ரலில் இடைநிலை தேர்வு பெற்ற ஆசிரியர்களை முன்னுரிமைப் பட்டியலில் சேர்க்காமல் அவர்களை விடக் குறைந்த பணிக் காலம் உரிய ஆசிரியர்களுக்கு பதவி உயர்வு வழங்கப்பட்டுள்ளதாம். இதனல் 6 ஆசிரியர்கள் பாதிக்கப் பட்டுள்ளனர்.

இந்த முறைகேடு சம்பந்தமாக பலமுறை நேரிலும் — எழுத்து மூலமும் தெரிவித்தும் எவ்வித நடவடிக்கையும் எடுக்காத நகராட்சி ஆணையர், மாவட்டக் கல்வி அதிகாரிகள் ஆகியோருக்கும் இது சமபந்தமான நடவடிக்கையில் மெத்தனம் காட்டும் போக்குக்கும் வன்மையான கண்டனம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## ஆசிரியருக்கு...

## வறட்சி - வறுமை நிலையிலும் கொடுமையா?

ஐயா,

மதுரை மாவட்டம் ம. போத்தநதியிலும் அங்கிகிருந்து 1 மைல் கிழக்கே தள்ளியுள்ள இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்த வடமலைக் குறிச்சியிலும் வறட்சி நிலை பாதிப்பு ஏறத்தாழ ஒரே அளவுதான்.

ஆனல் வடமலைக் குறிச்சிக்கு மட்டும் வாரம் ஒன்றுககு 2 கிலோ கோதுமை, 2 கிலோ அரிசி வினியோகிக்கிருர்கள். போத்தநதிக்கோ அரிசி வினியோகம் கிடையாது.ஏனிந்த பாரபட்சம்?

நியாய விலைக் கடையில் அரசு நிர்ணய விலைப்படி ஒரு கிலோ கோதுமை ரூ. 1-40 தான். ஆனலை இங்கோ கிலோ ரூ. 1-60. ஏழைகளின துயர் போக்கும் பணியின் லட்சணம் இதுதான் போலும்.

கடந்த 13—3—75 ல் போத்தநதியிலுள்ளசொசையட்டிக்கு வந்த 37 மூடை கோதுமையை நிறுத்துப் பார்த்ததில் 140 கிலோ குறைந்ததாம் இந்தஇழப்பை சரிக்கட்டத்தான கிலோவுக்கு 20 காசு அதிகமாம்.

மேலும் 1 கிலோ ரூ. 1-50ககு பில் போட்டு அதன்மீது செலவையும் ஏற்றி வசூல் செய்யுபபடி அதிகாரிகள் கூறியதாகவும் பேசப்படுகிறது.

அரசும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் இது சம்பந்தமாக ஏழைகளுக்கு நியாய விலையில் அரிசியும, கோதுமையும் மற்ற உணவுப் பொருள்களும் கிடைக்க ஏற்பாடு செய்வார்களா?

இவண்

எஸ். சுப்பாரெட்டி,
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்,
ம. போத்தநதி கிளை

## ஜாமீனில் விடுதலை

சென்னையில், ஏப் 4— திமுக தொழிற் சங்க ஊழியர் பிரதாப் சந்திரன் கொலை செய்யப்பட்ட வழககில் சேர்க்கப்பட்டு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட உழைக்கும் மக்கள் மாமன்றத்தைச் சேர்ந்த நாடோடி ஜெயராமனும் டெல்லி பாபுவும் ஜமீனில் விடுதலை செய்யப்பட்டுள்ளனர்.

இவ்விருவருக்கும் விதிக்கப்பட்ட தண்டனையை எதிர்த்து மேல் கோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டுள்ளது,

# போட்டமுதல் அத்தனையும் போச்சே

## அமெரிக்க பாதுகாப்புக் காரியதரிசி சிலேசிங்கர் அழுது புலம்புகிருன்

அமெரிக்கர் அமைத்துக் கொடுத்த அந்த அழகான நெடுஞ் சாலைகளிலே, தென்வியட்நாமிய விடுதலைப் படைகள், சுற்றுலாப் பயணிகள்போல குஷியாக வந்து கொண்டிருக்கிருர்கள் என்று ஒரு செய்தி கூறுகிறது.

தென்வியட்நாம் தியூ சர்க்காரின் 2வது பட்டாளம் திடீரென்று மறைந்து விட்டது. அது விடுதலைப் படையுடன் சேர்ந்து விட்டதோ என்ற பயம் தியூவுக்கு ஏற்பட்டிருக்கிறது.

### விமானங்களும் ஹெலிகாப்டர்களும் போச்சே போச்சே

அமெரிக்க பாதுகாப்புக் காரியதரிசி சிலேசிங்கர் வாஷிங்டனில் பேசுகையில், "தென்வியட்நாம் தியூ படைகளுக்குஇன்னும ஒரு மாதம் கடுமையான கண்டமாகவே இருக்கும்" என்ருர்.

மேலும் அவர் பேசுகையில், 'தியூ சர்க்காருக்கு இன்னும் அதிக அளவில் ஆயுத சப்ளைகள் செய்ய வேண்டும் என்று பலர் கூறுகிருர்கள். ஆயுத சப்ளை செய்து என்ன பலன்?

தியூ படைகள் தென் வியட்நாம் விமான தளங்களைவிட்டு ஓடிவந்துவிட்டதால், நூற்றுக் கணககான பேர்ர் விமானங்களும ஹெலிகோப்டர்களும், இதர ஆயுத சாதனங்களும் எதிரிகள் வசம் சிக்கிவிட்டன.

அவற்றின் மதிப்பு மாத்திரமே 100 கோடி டாலர் (800 கோடி ரூபாய்) இருக்கும்' என்று மனமுடைந்து உருகினர்

### ஐ நா செயலர் மீது ஆத்திரம்

டானங் நகரையும் ஹியூ நகரையும் விடுதலைப் படைகள் தாக்கியபோது, அந்த நகரிலுள்ள மக்களை விடுதலைப் படைகள் கொன்றுவிடுமென்றும், இப்பொழுதே தப்பி ஓடிவிடுங்கள் என்றும் கூறி பயபீதியை உண்டாக்கினர்கள் தியூ அரசினர்.

அமெரிக்க பொம்மையரசின் கொடுங்கோன்மையினின்றும மக்களைக் காக்க வந்த விடுதலைப் படையினர், மக்களைத் தாக்க முற்படுமா?

தியூ அதிகாரிகள் உண்டாக்கிய பயபீதியினல் ஏராளமான பொது மக்கள் வீடுவாசல்களை விட்டு வெளியேறினர்கள். வெளியேருதவர்களை தியூ அதிகாரிகள் பலாத்காரமாக வெளியேற்றினர்கள்.

ஆனல், வீடு வாசல்களை விட்டு அலங்கோலமாக அகதிகளைப் போல் வெளியேறவிடாமல், விடுதலைப் படை தடுத்து விட்டது. வெளியேற மறுத்த மக்கள் விடுதலைப் படையினர் நகருக்குள் நுழைந்தபோது வரவேற்பு அளித்தனர்.

ஆனல், அமெரிக்க நிருவாகம் ஐக்கிய நாடுகள காரியதரிசி வால்தியம் மீது எரிந்து விழுகிறது. அகதிகளை வெளியேற்ற விடாது தடுத்து மறிக்கும் வடவியட்நாம் அரசை ஐ நா காரியதரிசி ஏன் கண்டிக்க வில்லை? கைகளைக் கட்டிக் கொண்டு வேடிக்கை பார்த்தார்" என்று கடிந்து கொண்டது.

# சாமான்யர்கள்...?

தமிழ்நாட்டிலிருந்து வந்திருந்த அம்மையாரின் அந்த இசை நிகழ்ச்சி நன்றாக இருந்தது. மிகவும் அருமையான முறையில் நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டு இருந்ததுவும் அதற்கு ஒரு காரணமாயிருக்கலாம். வந்திருந்தவர்கள், இந்த கர்நாடக இசை நிகழ்ச்சியை, இவ்வளவு அருமையாக ரசிப்பார்கள் என்று நினைக்கவில்லை. வெறும் சர்க்கார் சிப்பந்திகளும் அதிகாரிகளுமான டில்லிப் பட்டணத்தில் உள்ளவர்களுக்கும் இத்தகைய உணர்வுகள் இருக்காது என்று நான் நினைத்ததுண்டு. ஏன்? நாட்டின் பல பாகங்களில் சின்னஞ்சிறிய ஊர்களிலும், சிறு நகரங்களிலும் உள்ளவர்களும் அப்படித்தானே நினைக்கிருர்கள்.

எனது அருகில் அமர்ந்திருந்தவர் ஒரு குட்டி அதிகாரியாக இருப்பாரென்று நினைக்கிறேன்.

"இங்குள்ளவர்கள் நாட்டின் பெரும்பாலான மக்களைவிட மாறிய உணர்வுகளையும் ரசனையும் உடையவர்களாக இருப்பார்கள் என்று நினைத்தேன்" —அவரைப் பார்த்துக் கூறினேன்.

"இல்லை. அது உண்மை அல்ல. நாங்களும் கோடானுகோடி மக்களைப்போல் சாமான்யர்கள் தான்" என்ருர் அவர்.

நான் அவரையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"பாருங்களேன்; திண்டுக்கல்லிலோ, திருநெல்வேலியிலோ உள்ளவர்களைப்போல்தான் நாங்களும் காலையில் எழுந்து குளித்து, உடையுடுத்துகிறோம், காலை உணவு அருந்தியவுடன் அவர்களைப்போலவே தான் அலுவலகம் சென்று, எங்களால் ஆன எளிய பணிகளைச் செய்கிறோம்" என்று தொடர்ந்தார் அவர்.

'எளிய பணி என்றல்?'

'வேறு ஒன்றுமில்லை. சிலர் சட்டமியற்றுவார்கள் சிலர் அதனை எதிர்த்து வாய்ஓயாமல் பேசிக்கொண்டே இருப்பார்கள். சிலர் பத்திரிகைகளில் வந்த ஆசிரியருக்கு கடிதம் என்ற பகுதியைப்படித்து கத்தரித்து வைப்பார்கள்' என்ருர்.

'ஆமாம்! மிகவும் எளிய பணிதான்' என்றேன்நான்.

'ஏன் கடுமையான வேலைகளும் உண்டு!

'எப்படி?

'நமது சரக்குகளை வெளிநாட்டில் விற்பது பற்றி யோசிக்கலாம், ஒருவர். உதாரணமாக தென்வியட்நாமில் போர் நடக்கிறது. அங்கு நமது லாரிகளையும் டிரக்குகளையும் அனுப்பினால் நமக்கு நல்ல வியாபாரம் ஆகுமல்லவா? இதைப்பற்றி, ஏதாவது ஒரு ஆபீசின் ஏதாவது ஒரு மூலையில் அவர் யோசித்துக் கொண்டிருப்பார்'

'அவ்வளவு தானு?

'அது என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்.பட்ஜெட்டில்,போலீசுக்கும்இராணுவத்திற்கும்,எல்லைப்படைக்கும் எத்தனை கோடி ரூபாய் இந்த ஆண்டு அதிகமாக ஒதுக்கலாம் என்பது பற்றி சிந்தித்து முடிவு செய்வதென்ன சாதாரணமான விஷயமா? அப்படி முடிவு செய்தாலும், அந்த முக்கியமான செலவினங்களுக்கு பணம் கிடைக்க வேறு வழி கண்டுபிடிக்க வேண்டுமே? 'வறட்சி நிவாரணம்' என்ற பெயரில் எத்தனை கோடி அநியாயமாகப் போகிறது! அதனைக்குறைக்க யோசிப்பார் ஒருவர்!

'நல்ல யோசனைதான்' என்றேன் நான்.

'எங்களில் சிலர் அமெரிக்கர்களின் நடவடிக்கைகளை கண்காணிப்போம்'

'அப்படியா?'

'வேறு சிலர் அமெரிக்காவிடமிருந்து கோதுமை கிடைக்க வழி என்ன என்பது பற்றி யோசிப்போம்'

'அப்புறம்?'

'சிலர் ஜனங்கள் படும் கஷ்டங்களைப் பற்றி மந்திரிமார்களுக்கு அறிக்கை தயாரித்துக்கொடுப்போம்!'

'......................'

'வேறு சிலர் பெரிய கம்பெனிகளின் கடன் சுமையைக் குறைக்க வழிதேடுவோம்.'

நான் மூச்சுவிடவில்லை.

'தலைநகரத்திலிருப்பவர்களும் சாதாரண ஜனங்கள்தான். இதை வெளியிலிருப்பவர்களுக்குக் கூறுங்கள். பெரிய முதலாளிகளின் ஆலோசகர்களோடு வெகுநேரம் உரையாடுவோம். பிறகு களைப்பைப்போக்க அவர்களுடைய செகரட்டரி(ணி) கூட உணவருந்த செல்லுவோம். அவர்கள் மீது அரசாங்கநடவடிக்கை ஏதாவது தொடர்ந்தால் அதனை தடுத்து நிறுத்துவது அவ்வளவு லேசான விஷயமல்ல. பட்ஜெட்டில் எவ்வளவு பற்றுக்குறை இருக்க வேண்டும் என்று முடிவு செய்வதே நாங்கள்தான்.

'நல்லதுதான்! வாங்கும் ஊதியத்திற்கு உண்மையாக உழைப்பீர்கள்!" என்றேன நான்.

அதுதான் விஷயம்! சில சமயம் பொய்கூட சொல்ல வேண்டியது உள்ளது! பத்திரிகைக்கு நாங்கள் அறிக்கை கொடுப்போம்! எப்படி எழுதியிருந்தாலும் நாங்கள் கொடுத்ததுதான் சரி என்று சாதிப்போம்.

'இது புதுமையாக இருக்கிறதே?'

'அப்படித்தான் இருக்கும். நாங்கள் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள்! கடினமான வேலைக்குப் பிறகு நாங்கள் பொழுது போக்க ஏதாவது ஒரு நாட்டின் தூதுவராலயத்துக்குச் செல்வோம்! சிலர், பெரும் முதலாளிகள் தங்கியுள்ள ஹோட்டல்களுக்குச் சென்று அரட்டை அடிப்போம்! சிலர் சீட்டாடுவோம்!

'ஏன் பிக்னிக் போகலாமே?...'

'கண்டிப்பாக! சமயம் கிடைத்தால் சனிக்கிழமை மதியம் புறப்பட்டு காஷ்மீர் வரை செல்வோம்! திங்கள் அலுவலகத்திற்குக் கண்டிப்பாக வந்து விடுவோம்!

'அப்படியா?'

ஆமாம்! எங்களைப் பலர் தவறுகப் புரிந்து கொண்டிருக்கிருர்கள். நாங்கள் சாமான்ய மனிதர்கள்தான்! கொஞ்சம் படித்திருக்கிறோம்! தவறு செய்ய மாட்டோம்! எங்களை விட விஷயஞானம் உள்ளவர்கள் கிடையாது என்ற தன்னம்பிக்கை உடையவர்கள்! அவ்வளவுதான்'

'அப்படியானல் நீங்கள்......?

"நான் ஒரு செக்ஷன் ஆபீசர்" எங்கள்ஜாயிண்ட் செகரட்டரி கூட வந்திருக்கிருர். அறிமுகம் செய்யட்டுமா?

நான் பதில் கூறுமால் நழுவி விட்டேன்.குட்டி அதிகாரி சாமான்யர் என்றால் பெரிய அதிகாரி சாமான்யருக்கும் சாமான்யராகத்தானே இருக்கவேண்டும்...?

—திலீபன்

# வலது கம்யூனிஸ்ட் கட்சி காங்கிரஸ் கட்சியின் உபகிரஹமே

## 'அபார' பலத்தின் பின்னணி என்ன? இராஜேஸ்வரராவுக்கு கேள்விக்கணை

— எம். பசவபுன்னையா

விமர்சனக் கட்டுரை-6

சோவியத் சோஷலிசம் அல்லது சீன சோசலிசம் ஆகிய இரண்டிக்குள் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது என்ற திவாலாகிப்போன கொள்கையைத் தழுவியஅவர்கள்-வலது கம்யூனிஸ்ட்கள்—உலக சோஷலிச முகாமின் ஒற்றுமைக்காகப்பாடுபடுவதைக் கைவிட்டுவிட்டார்கள்.

### வெட்கத்தை விடுத்து ஜம்பம்

உலகசோசலிச முகாமிலும், மற்றும் சர்வதேச கம்யூனிச இயக்கத்திலும் இன்றைக்கு நிலவிவரும் பெரும் பிளவு ஒற்றுமையின்மை நீடித்தாலும் கூட வலது கம்யூனிஸ்டுகள் பிரமாதமாக டமாரமடித்து முழக்கிவரும் -சமாதானம், சகவாழ்வு முன்னேற்றம் மற்றும் உலக சோசலிசம் போன்ற கோஷங்களை அடைந்து விடலாம் என்று அவர்கள் கருதுகிறுற்போல்தோன்றுகிறது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை பலவந்தமாக ஒடுக்குவதிலும் மேற்கு வங்கம் போன்ற மாநிலங்களில் சுதந்திரமான நியாயமான தேர்தல்களில் கலந்து கொள்ளும் அடிப்படை ஜனநாயக உரிமையைக்கூட அதற்கு மறுப்பதிலும், முதலாளித்துவ— நிலப்பிரபுத்துவ காங்கிரஸ் கட்சியோடும் அரசாடும் அவர்கள் சேர்ந்து கொள்கிருர்கள். ஆனலும் தாங்கள்தான் மிகப் பெரிய எதிர்க்கட்சியாக வளர்ந்திருப்பதாக வெட்கத்தை விட்டு ஜம்பமடிக்கிருர்கள் அவர்கள்.

அது உண்மையில் பெரிய கட்சியும் அல்ல; உண்மையான எதிர்க்கட்சியும் அல்ல. மாருக அது ஆளும் காங்கிரசின் ஒரு உபகிரஹமே என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. இந்தியாவில் கம்யூனிச இயக்கம் தோன்றி அரை நூற்ருண்டுக்கும் மேலாகியும்கூட அது மிகவும் பலவீனமாக இருக்கிறது, அந்நிய ஏகாதிபத்தியவாதிகளும உள்நாட்டுச் சுரண்டும் வாக்கங்களும் ஏவிவிடும் அடக்குமுறை மற்றும் சீர்குலைவுகளோடு, வலது திருத்தல்வாதிகள் ஒரு புறமும் இடது சந்தர்ப்பவாதிகள் மற்ருெரு புறமும் தூண்டிவிடும் பெரும் பிளவுகளுமே இந்தப் பலவீனத்திற்குக் காரணம்.

### அசிங்கமான உண்மை

ஆனல் இது குறித்து அவர்கள் மிகவும் கவலையோ, தாழ்வுணர்ச்சியோ கொண்டதாகத் தெரியவில்லை. அதற்கு மாருக, இராஜேஸ்வரராவ், தன்னுடைய கட்சிக்கு இப்போதைக்கு இருப்பதாகச் சொல்லப்படும் அபார பலத்தைக் கண்டு உணர்ச்சிவசப்படுகிருர். இந்தப் பலமும் கூட ஆளும் காங்கிரஸ் கட்சியின் தயவால் அவர்களுக்குக் கிடைத்தது; அவ்வாறு வலது கம்யூனிஸ்டு கட்சியை காங்கிரஸ் ஆதரிக்கக் காரணம், இந்திய கம்யூனிஸ்டுக்கட்சி என்ற பெயர் தாங்கியுள்ள அக்கட்சியின் துணையால், உண்மையான கம்யூனிஸ்ட் இயக்கத்தை ஒடுக்குவதற்கே என்பதும் நாமறிவோம்.

மார்க்சிஸ்ட் கட்சியை 'இரண்டு மாநிலங்களில் மட்டுமே உள்ள கட்சி' என்றும், ஆனல் வலது கம்யூனிஸ்ட் கட்சி 'எல்லா மாநிலங்களிலும் உள்ள கட்சி' என்றும் சொல்லி, 'நிலப்பறி இயக்கம்', 'பதுக்கல் எடுப்பு இயக்கம்' 'ஆளும் காங்கிரஸ் கட்சியோடு சேர்ந்து கொண்டு நிலச் சீர்திருத்தங்களுக்கான கூட்டு இயக்கங்கள்', 'பார்லிமெண்டை நோக்கி மக்கள் பேரணி' போன்ற அனைத்திந்திய போலிப் போராட்டங்களையும், விஜயவாடாவில் நடந்த பத்தாவது கட்சி மாநாடு போன்ற கேலிக் கூத்துகளையும் வலது கம்யூனிஸ்ட் கட்சி மட்டுமே நடத்த முடியும் என்றும், ஆனல் மார்க்சிஸ்ட் கட்சி இதிலெல்லாம் அவர்களோடு போட்டிபோட முடியாதென்றும் ராஜேஸ்வரராவ் பேசியதன் பின்னேயுள்ள அசிங்கமான உண்மை நிலவரம் இதுதான். இத்தகைய கட்சியைத்தான் "உலக சோசலிச முகாமும், சர்வதேச கம்யூனிச இயக்கமும்" ஆசீரித்து வாழ்த்துகிறதாம்! ஆனல் மார்க்சிஸ்ட் கட்சி, பாவம், தனிமையில் விடப்பட்டுள்ளதாம்! இவ்வாறு தனிமையில் விட்ட அதைக் கடவுள் ஆசீர்வதிப்பாராக!

### 'ஒற்றுமை'யின் பின்னேயுள்ள உண்மை நிலை

ஆமாம்! இது உலக கம்யூனிஸ ஒற்றுமையின் ஒரு அதிசயமான ரகம்தான்! செக்கோஸ்லோவாகியாவின் சுதந்திரத்தையே பறித்ததாகச் சொல்லி சோவியத் நாட்டையும் பிற வார்ஸா ஒப்பந்த நாடுகளையும் ஆக்கிரமிப்பாளர்கள் என்று கடுமையாகத் தாக்கிய கம்யூனிஸ்டு கட்சிகளும், அவர்களால் அவ்வாறு தாக்கப்பட்ட சோவியத் கட்சியினரும் ஒரே மேஜையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு சோஷலிஸ முகாமின் ஒற்றுமை பற்றியும் சர்வதேச கம்யூனிச இயக்கத்தின் நல்லிணக்கம் பற்றியும் புகழ் பாடுகிருர்கள் என்ருல், ஓ, அதிசயமான ஒற்றுமைதான்!

சோவியத் கம்யூனிஸ்டு கட்சி உட்பட 81நாட்டுக்கட்சிகள் 1960 ம் ஆண்டில் கூடி 'யுகோஸ்லேவியாவின் இன்றைய திருத்தல் வாதத்தை ஏகமனதாகக் கண்டித்தனர். 'சோஷலிஸ முகாமையும் உலகக் கம்யூனிஸ்டு இயக்கத்தையும் எதிர்த்து யுகோஸ்லேவிய திருத்தல் வாதிகள் கவிழ்ப்பு வேலைகளில் ஈடுபடுவதாகவும், 'யுகோஷ்லேவியாவின் திருத்தல் வாதத்தலைமையை தொடர்ந்து அம்பலப்படுத்துவதும், அவர்களின் லெனினீய விரோதக்கருத்துக்களில இருந்து கம்யூனிஸ இயக்கத்தையும், தொழிலாளி வர்க்க இயக்கத்தையும் பாதுகாப்பதும் மார்க்சீய லெனினீயக் கட்சிகளின் ஒரு முக்கியம் பொறுப்பாகும்' என்றும் மேலும்கூறினர்,

ஆனல் அதே சோவியத் கம்யூனிஸ்டு கட்சியின் தலைவர்கள்யுகோஸ்லாவியதிருத்தல்வாதிகளைஎதிர்த்த இந்தப் போராட்டத்தைக் கைவிட்டதோடு மட்டும் அல்லாமல், சோவியத் நாட்டின் மிக உயர்ந்த பரிசாகிய லெனின் விருதை யுகோஸ்லாவியாவின் முக்கியத் தலைவரான மார்ஷல் டிட்டோவிற்கு வழங்குகிருர்கள்; யுகோஸ்லாவிய கம்யூனிஸ்டுக் கட்சியை உலகின் முக்கியமான மார்க்சீய—லெனினிபக் கட்சிகளுள் ஒன்ருக நடத்தி அதனோடு இதயங் கலந்து கூடிக் குலாவுகிருர்கள். ஆம்! இது அதிசயமான ஒற்றுமைதான்!

உலக கம்யூனிஸ்டு இயக்கத்தின் இப்படிப்பட்ட, ஒற்றுமையையும், அதன் முழு மனதான ஆதரவையும் பற்றித்தான் வலது கம்யூ-க்கள் இவ்வளவு பெருமைபபடுகிருர்கள் என்ருல் இதில் நாம் அவர்களைப் பார்த்துப் பொருமைப்படுவதற்கு ஒன்றுமில்லை! தொடர்ந்து இதே பாதையில் சென்று வெற்றிபெற அவர்களுக்கு நம் வாழ்த்துக்கள்; அவ்வளவுதான்!

'வைத்தால் குடுமி' சிரைத்தால் மொட்டை' என்ற பாணியில் இராஜேஸ்வரராவ் நடத்தும் அரசியல் குட்டிக்கரண வேலைகள் பற்றி நாம் போதுமான அளவு சொல்லியிருக்கிருேம்.

காங்கிரஸ் அரசின் முதலாளித்துவ—நிலப்பிரபுத்துவ ஜனநாயகம் இல்லாவிட்டால் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் 'பாசிஸ சர்வாதிகாரம்' ஜாங்கிரசும வலது கம்யூனிஸ்டும் உள்ளிட்ட இடதுசாரி ஜனநாயக முன்னணி அல்லது ஜெ. பி. தலைமையில் எல்லா எதிர்க்கட்சிகளின் அரசியல் கூட்டணி— சோவியத் சோஷலிசத்திற்கு ஆதரவாக சீன சோஷலிசத்திற்கு எதிரான போக்கு அல்லது சீன சோஷலிசத்துக்கு ஆதரவாக சோவியத் சோஷலிசத்திற்கு எதிரான போக்கு—சோவியத் வலது திருத்தல்வாதம் அல்லது சீன இடதுசாரி அதிதீவிரவாதம் என்ற பாணியில்— அவர் கூறும் 'இரண்டுக்குள் ஏதாவது ஒன்று' சவால்களைப் பற்றியும் சொல்லியாகி விட்டது.

நாம் இனிமேல், வலது கம்யூனிஸ்டு கட்சியினரின் சில கோஷங்களையும், எப்படி அவைகள் படிப்படியாக நிதானமாக காங்கிரஸ் கட்சி மற்றும் அரசாங்கத்துடன் வர்க்க சமரசக் கூட்டுக்கான முழுமையான தத்துவமாக வளர்ச்சி பெற்றது என்பதையும் ஆராய்வோம்.

மார்க்சிசம் — லெனினிசத்தை கற்கும் எந்தஒரு மாணவனுக்கும், இந்திய கம்யூனிச இயக்கத்தில் உள்ள வலதுசாரி — திருத்தல்வாதத்தினை ஆராய்வது மிகவும் சுவையான, சிந்தனையைக் கிளறக் கூடிய ஒன்ருகும். வலதுசாரி திருத்தல்வாதமும் சரி, இடது சாரி திரிபுவாதமும் சரி, அவைகளின் இயல்பிற்கேற்ப சர்வதேசிய பிரச்னைகளாகவே இருக்கின்றன. இருந்தாலும் நாடுவாரியாக இந்தப் பிரச்னையை ஆராய்வது மார்க்சீய — லெனினிசத்தை இன்னும் தெளிவாக, ஆழமாகப் புரிந்து கொள்வதற்கு உதவி புரியும்.

இந்திய வலது — திருத்தல்வாதத்தின் வீச்சு அளவில் மிகப்பெரியது. இதனை இது போன்ற ஒரு சிறிய கட்டுரையில் ஆராய முடியாது. நாம் இப்பொழுதுகாணப் போவதெல்லாம் விஜயவாடாவில் நடைபெற்றுள்ள வலது கம்யூனிஸ்ட் 10வது மாநாட்டில் வந்துமுடிந்துள்ள அவர்களின் இந்த 'நீண்ட பயணத்'தின்போது அவர்கள் அவ்வப்பொழுது எழுப்பிய பல்வேறு கோஷங்களைப் பற்றித்தான்.

கட்சியின் நாலாவது காங்கிரசிற்கான 'அரசியல் நகல் அறிக்கையினை' உள்கட்சி விவாதத்திற்கு 1955—56-ல் முனவைக்கப்பட்ட பொழுதே,வலதுசாரித் திருத்தல் வாதத்தை நோக்கிய பயணத்திற்கு நடைபோட ஆரம்பிக்கப்பட்டுவிட்டது, இது, முதலில் 1951- கட்சித் திட்டத்தில் 1947 ல் ஆட்சியதிகாரம் மாற்றிக்கொடுக்கப்பட்டபின ஏற்பட்ட இந்திய அரசு (ஸ்டேட்) மற்றும் அரசாங்கத்தின் (கவர்மெண்ட்) வர்க்க குணம்சத்தை நிர்ணயிப்பதில் ஏற்பட்ட சில இடதுதன்னிச்சைப்போக்கான தவறுகளைத் திருத்துவது என்ற உருவத்தில் எழுந்தது. ஆனல் இந்தத் தவறு இருமுகப்போககுள்ளது.

'இந்தத்திட்டத்தில்' ஒருசில தனி மனிதர்களைத் தவிர அனைத்து இந்திய பெருமுதலாளிகளும், பெரிதல்லாத முதலாளிகளும் ஏகாதிபத்திய எதிர்ப்புப்பணியில் இறங்கியுள்ள வர்க்கமாகச் சித்தரிக்கப்பட்டிருந்தது. மேலும், இதே காரணத்திற்காக மக்கள் ஜனநாயகப் புரட்சிக்கான வர்க்கக் கூட்டணியில ஒரு இடமும இவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. வேறு வார்த்தையில் சொல்வதென்ருல், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் நம நாட்டை ஆண்டபோது, இந்தியாவிலுள்ள காங்கிரஸ் கட்சிக்கும் பாகிஸ்தானிலுள்ள முஸ்லீம லீகிற்கும் அரசியல அதிகாரம் மாற்றித் தரப்படாததற்கு முன்புள்ள மாதிரியான வர்க்க யுத்த தந்திரத்தைப பின்பற்றினேமோ அதே யுத்த தந்திரத்தையே மக்கள் ஜனநாயகப் புரட்சிக்கும் நாம் பின்பற்றினேம் இந்தத் தவறின் மற்ருெரு அம்சம் என்னவென்ருல் புதிய இந்திய அரசின் வர்க்க குணம்சத்தை நிர்ணயிக்கும் போது இது ஒரு உபகிரக அரசு என்றும், இந்திய அரசாங்கம,பிரிட்டிஸ் ஏகாதிபத்தியம் ஆட்டுவிக்கும்படியெல்லாம் ஆடுகிற ஒரு பொம்மை அரசு என்றும் கணித்திருந்ததுதான்.

இப்படிப்பட்ட பெரிய தவறுகள் செய்யப்பட்டிருந்த போதிலும். அதே திட்டத்தின மற்ருெரு இடத்தில் இந்திய அரசு, மற்றும் அரசாங்கத்தைப் பற்றிய சரியான வர்க்க நிர்ணயிப்புப் செய்யப்பட்டிருந்தது. அதுதான் **இந்திய அரசும், அரசாங்கமும், பெரு முதலாளிகள் தலைமை வகித்து நடத்துகின்ற ஒரு முதலாளித்துவ—நிலப்பிரபுத்துவ அரசு.**

### நிர்ணயிப்பில் எத்தனை மாற்றங்கள்

அன்று ஒன்ருயிருந்த இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமை பீடத்தில் ஆதிக்கம் செலுத்திய இன்றைய வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்கள், அன்று செய்யப்பட்ட தவறுகளைத் திருத்துவதற்குப் பதிலாக—புதிய இந்தியஅரசு **பெருமுதலாளிகளால் தலைமை தாங்கி நடத்தப்படுகின்ற ஒரு முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ அரசு** என்ற சரியான வர்க்க நிர்ணயிப்பை தாக்க ஆரம்பித்தனர்.

புதிய இந்திய அரசைப்பற்றிய இந்த வர்க்க நிர்ணயிப்பிற்கு திருத்தல்வாதிகள் கொண்டு வந்த முதல் திருத்தம் இந்திய அரசிற்கு ஒரு புதிய வர்க்க இலக்கணம் கொடுக்க வேண்டுமென்பது தான் இதன்படி, இதுவரை பெருமுதலாளித்துவம் தலைமை வகித்து நடத்துகிற ஒரு முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ அரசுதான இந்திய அரசும், அரசாங்கமும் என்று சொல்லி வந்ததை மாற்றி இந்திய அரசு வெறும் **முதலாளித்துவ—நிலப்பிரபுத்துவ அரசு,** என்று சொல்ல ஆரம்பித்தார்கள். அதாவது இந்திய அரசிற்கு தலைமை தாங்கி வரும் பெரும் பூர்ஷ்வாக்களின் பங்கினைத் தங்களது பேனு முனையினல் அடித்து வீழ்த்திவிட்டு, தலைமைப் பதவியை பெரிய, பெரியதல்லாத அனைத்து பூர்ஷ்வாக்களுக்கும் பகிர்ந்தளித்தார்கள்.

அடுத்து வந்த திருத்தல்வாத திருத்தம் என்னவென்ருல், இதுவரை இந்திய அரசும், அரசாங்கமும் ஒரு **முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ அரசும், அரசாங்கமுமே** என்று சொல்லி வந்ததை மாற்றி இதற்குப் பதிலாக இது வெறும் **முதலாளித்துவ அரசும். அரசாங்கமுமே** என்று சொல்ல ஆரம்பித்தார்கள். அதாவது அரசு அரசாங்கத்தின் வர்க்க கூட்டுச் சேர்க்கையிலிருந்து நிலப்பிரபுத்துவ வர்க்கத்தை நீக்கி விட்டார்கள்.

மூன்ருவதாக வந்த மற்ருெரு திருத்தல்வாத திருத்தம் இந்திய அரசையும் அரசாங்கத்தையும் **தேசிய முதலாளிகளின் அரசு மற்றும் அரசாங்கம்** என்று வர்ணித்தது அதாவது இந்தவர்க்கநிர்ணயிப்பு அரசு, மற்றும அரசாங்க அதிகாரத்தின் தலைமைப் பதவியினின்று பெருமுதலாளிகளை நீக்குவதோடல்லாமல், அவர்களை அரசு அதிகாரத்திலிருந்தே முழுமையாக நீக்கி விடுகிறது.

இப்படியாக, பெருமுதலாளித்துவ நிலப்பிரபுத்துவ வர்க்கங்களை அரசு மற்றும் அரசாங்க அதிகாரத்திலிருந்து நீக்குவதன் மூலம் **இது, பெரிதல்லாத தேசிய முதலாளிகள் அரசும் மற்றும் அரசாங்கமுமாக** மாற்றி விடுகிறது.

மத்திய அரசில் பெருமுதலாளிகளுக்கு குறிப்பிடத்தக்க அளவு பிடிப்பு இருக்கிறது மாநில அரசுகளில நிலப்பிரபுக்களுக்கு பெரிய செல்வாக்கு இருக்கிறது என்று சொல்வதெல்லாம் தங்களது கட்சியிலுள்ள எதிர்ப்பு அணியினர் வாயை அடைப்பதற்கும, தங்களைப் பின்பற்றுபவர்களைக் குழப்புவதற்கும் செய்யப்படுகின்ற தந்திரமே தவிர வேறில்லை.

முதலாளித்துவ — நிலப்பிரபுத்துவ வர்க்கங்களோடு வர்க்க கூட்டு ஏற்படுத்துதல என்ற தங்களது வலது — சந்தர்ப்பவாத அரசியல் — தத்துவ நிலைக்குத் தகுந்தாற்போல் இந்திய அரசு மற்றும் அரசாங்கத்தைப் பற்றிய வர்க்க நிர்ணயிப்பில் ஏகப்பட்ட திருத்தங்களை கொடுத்தவுடன், காங்கிரஸ் கட்சியோடும் காங்கிரசின் அரசாங்கத்தோடும் கூட்டுச் சேருவது, கூட்டணி அமைப்பது என்ற அவர்களது நெடுநாளைய ஆசையை தற்பொழுது வலது கம்யூனிஸ்ட் கட்சி நிறைவேற்றிக் கொணடுள்ளது.

### காங்கிரசோடு கூட்டுச்சேர குறி

வலதுகம்யூனிஸ்ட்கட்சியின் 10வது மாநாட்டில் நடந்திருப்பதுஇதுதான் காங்கிரசும வலது கம்யூனிஸ்டும சேர்ந்த ஒரு கூட்டணி அமைக்கவேண்டும் என்பதற்காக அவர்கள் தொடங்கிய பயணம் இலக்கை அடைந்து விட்டது.

இந்திய அரசும, அரசாங்கமும், பெரிதல்லாத தேசியமுதலாளிகளின் அரசும அரசாங்கமும் என்று வேண்டுமென்றே தான் வலது கம்யூனிஸ்ட் தலைவர்களால் திருத்தப்பட்டது. காரணம் அப்பொழுதுதான் ஏகாதிபத்திய எதிர்ப்பு மற்றும நிலப்பிரபுத்துவ எதிர்ப்புப் புரட்சியை பூர்த்தி செய்வது என்ற பெயரில், பூர்ஷ்வாக்களின் இந்தப பிரிவோடும, அதன் அரசோடும், அரசாங்க அதிகாரத்தோடும் உறவுகொள்ள முடியும். அதற்கு, மார்க்சிஸ-லெனினிஸ வார்த்தைகளில் முத்திரையும பதிக்க முடியும். இதுதான் வலது கம்யூனிஸ்ட் தலைவர்களுடையதும், அவர்களது சர்வதேசியப் பாதுகாவலர்களுடையதுமான "சிருஷ்டிகரமான மார்க்சிஸம்"!

இன்றைய இந்திய அரசு மற்றும் அரசாங்கத்தின் அடிப்படை வர்க்க குணம்சத்தை மிக எளிதாக மாற்றத் துணிந்த வலது கம்யூனிஸ்ட் கட்சியின் சிருஷ்டிகர மார்க்சிஸ்டுகளுக்கு, ஆளும் காங்கிரஸ் கட்சியின் வர்க்க குணம்சத்தை நிர்ணயிப்பதிலும் தேவையான மாற்றங்களைச் செய்வதிலும் சிரமம் ஏதும ஏற்படவில்லை. அப்படி மாற்றங்களைச் செய்தால்தான, ஆளும் காங்கிரசுக்கு எதிரான இடது மற்றும் ஜனநாயக முன்னணியை கட்டுவது என்ற கோஷத்தை மாற்றி, அதற்குப் பதிலாக காங்கிரசும், வலது கம்யூனிஸ்ட் கட்சியும உள்ள ஒரு கூட்டணியை கட்டுவது என்ற கோஷத்தை கொடுக்க முடியும் ஆனல் இந்தக் காரியத்தை செய்வதற்கு நீண்ட காலம் தேவைப்பட்டது. அத்தோடு கட்சி அணியினரின் வர்க்க உணர்ச்சியை மழுங்கடிப்பதற்கும் அவர்கள் புரட்சிகரப் பார்வையை மூடி மறைப்பதற்கும் பலவிதமான சாக்குப் போக்குகளையும் சொல்ல வேண்டியிருந்தது.

—தொடரும்

# ரூ. 13 ஆயிரத்து 449 கோடி

## சைகோன் பொம்மை அரசுக்கு அமெரிக்கா இறைத்து வந்த நிதி

1955 முதல் 1974 வரை, 19 ஆண்டு காலமாக, அமெரிக்க சர்க்கார், தனது கைப்பொம்மை சர்க்காரான தென்வியட்னும் சைகோன் அரசுக்கு 1681 கோடியே 10 லட்சம் டாலர்களைக் கொட்டிக் கொடுத்திருக்கிறது.

அதாவது சுமார் 13,449 கோடி ரூபாய் இது கொடுத்திருக்கிறது. அது வாங்கியிருக்கிறது.

சைகோன் பொம்மையரசிடம் 11 லட்சம் படைகள் இருக்கின்றன.

# கய்யூர் தியாகிகளின் வீர வரலாறு

கய்யூர்!

கேரளத்தின் வடகோடியிலுள்ள இந்த குக்கிராமத்தின் பெயரை, 1943 வரை கேரள மக்கள் கேள்விப்பட்டதில்லை. இப்பொழுது கய்யூர் என்றால், வணக்கத்திற்குரிய, வீரத் தியாகிகளின் புனிதமான கிராமம் என்று, கேரளம் மாத்திரமல்ல, அகில இந்தியாவே அறியும்.

மரணத்தைத் திணமாக மதித்து தாய் நாட்டின் விடுதலைக்காக ஆருயிரை அர்ப்பணித்த அந்த வீரத் தியாகிகள் யார்?

அப்பு

சிருகண்டன்

குன்ஹம்புநாயர்

அபூபக்கர்

1943-ம் ஆண்டு மார்ச் மாதம் 29-ம் நாள்! அப்புவும், சிருகண்டனும், குன்ஹம்புவும், அபூபக்கரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொடுங்கோலர்களால் தூக்கிலேற்றிக் கொல்லப்பட்ட நாள்!

தூக்குமேடையில் மரணக்கயிறு மூச்சை இறுக்கும் போது கூட அந்த மாவீரர்களின் திருவாயில், 'இன்குலாப் ஜிந்தாபாத்! கம்யூனிஸ்ட் பார்ட்டி ஜிந்தாபாத்!'—என்ற புரட்சி முழக்கங்கள் ஒலித்த வண்ண மிருந்தன.

தியாகத் திருவுருவங்களான கய்யூர் தியாகிகளின் நினைவுகளை கய்யூர் கிராமத்தில் காரியங்கோடு நதிக்கரையில் ஒவ்வோராண்டும் கொண்டாடி வருகிறார்கள்.

## விடுதலை போராட்டமும் விவசாயிகள் இயக்கமும்

1934—40-ம் ஆண்டுகளில், கேரளத்தில், மலபார் பகுதியில் சுதந்திரப்போராட்டங்கள் தீவிரமாக நடந்தன. அங்கு இயக்கத்தில் கம்யூனிஸ்ட் கட்சி முன்னின்றது. சுதந்திரத்தின் குறிக்கோள் அன்னிய ஆட்சி அகன்றுவிடுவது மாத்திரம் போதாது, உழுபவனுக்கு நிலம் வேண்டுமென்ற கோரிக்கையும் சுதந்திரக்கோரிக்கையுடன் இணைத்தே கம்யூனிஸ்டுகள் கிளர்ச்சி செய்து வந்தார்கள்.

மலபார் மாவட்டத்தின் கிராமங்களிலெல்லாம் விவசாயிகள் சங்கங்கள் தோன்றின. விவசாயிகள் இயக்கத்தின்மீது அன்னிய ஆட்சியாளர்கள் குரூர அடக்கு முறைகளைக் கட்டவிழ்த்து விட்டனர். அடித்து நொறுக்கினர். இரத்தத்தில் ஆழ்த்தினர்.

ஏகாதிபத்திய வாதிகளுக்கு விவசாயிகள் இயக்கத்தின் உள்ளடக்கம் எத்தகையது என்பது தெரியும்.

## ஏற்றிய கொடியை இறக்க மாட்டோம்

விவசாயிகள் இயக்கம் நிலப்பிரபுத்துவத்தை எதிர்த்துப் போராடுகிறதென்றால் அதன் அருத்தம் என்ன? கிராமப்புறங்களில் நிலப்பிரபுக்கள்தானே ஏகாதிபத்திய வாதிகளுக்குப் பிரதான அஸ்திவாரம்? ஆகவே நிலப்பிரபுக்களை எதிர்க்கும்படியான விவசாய போராட்டம், ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் போராட்டத்தின் முதற்கட்டம் என்பதை ஏகாதிபத்தியவாதிகள் உணர்ந்தனர். அதனால்தான் கொடிய அடக்கு முறைகளைக் கட்டவிழ்த்து விட்டனர்.

வர்க்க உணர்வும் அரசியல் போதமும் பெற்று, ஸ்தாபன ரீதியில் ஒன்று திரண்ட விவசாயிகள், அடக்குமுறைகளை துச்சமென மதித்து, நெஞ்சு நிமிர்த்தி போராடினர். இன்னுயிரே போனாலும், ஏற்றிய கொடியை இறக்கிட மாட்டோம் என்று கர்ஜித்தனர்.

## தலைவர் வி வி குன்ஹம்பு

கய்யூர் கிராமம் உள்ளிட்ட அந்த வட்டார விவசாய இயக்கத்துக்கு தோழர் வி வி குன்ஹம்புதான் தலைவராக விளங்கினார்.

இதுவரை இன்றென்று வெளியுலகுக்கு அறிமுகமில்லாத மக்கள்—எழுத்தறிவு இல்லாத மக்கள்—ஒடுக்கப்பட்ட மக்கள்—இப்போது முஷ்டியை உயர்த்திவிட்டார்கள். தலைமுறை தலைமுறையாக நூற்றுண்டுகளாக தங்களை அடக்கி ஒடுக்கி வந்த சமுதாய அமைப்புக்கு எதிராக சவால் விட்டார்கள். விவசாய இயக்கம் காட்டுத் தீ போல் ஏற்றிப் படர்ந்தது.

## போலீசுடன் மோதல்

இப்படிப்பட்ட வீறு கொண்ட கால கட்டத்தில்தான், ஓர்நாள். கய்யூர் விவசாயிகளின் போராட்டத்தின் போது, போலீஸ் படை புகுந்து தடியடி நடத்தியது. விவசாயிகள் பலர் படுகாயமுற்று வீழ்ந்தனர்.

போலீஸ் படையில், அரக்க குணம் படைத்த ஒரு மூர்க்கன் இருந்தான். இயக்கத்தின் முன்னணி ஊழியர்களைக் குறி பார்த்து தாக்குவதுதான் அவனது வெறிகாக — ஒரே குறியாக இருந்தது.

அவனது வெறித் தாக்குதல்களுக்கு ஏற்றவாறு, நிலப்பிரபுக்கள் அவனைப் போற்றிப் பாராட்டினார்கள்.

இந்த வெறியனுக்கும் கய்யூர் விவசாயிகளுக்கும் ஒருநாள் மோதல் ஏற்பட்டது. இந்த மோதலில் அந்த போலீஸ்காரன் மாண்டான்.

## தூக்கிலேற்றப்பட்ட கய்யூர் தியாகிகள்

இந்தத் தாக்குதலைத் தொடர்ந்து அடக்குமுறை தலைவிரித்து ஆடியது. ஏழை மக்களின் குடிசைகளெல்லாம் நொறுக்கப்பட்டன.

கிராமத்தில் சித்திரவதையும் கொடுங்கோன்மையும் சொல்லி முடியாது. எழுதி மாளாது.

ஏராளமானோர் கைது செய்யப்பட்டு சிறையில் தள்ளப்பட்டனர். வழக்கு விசாரணை மங்களூரில் நடைபெற்றது.

வழக்கில் மாட்டப்பட்டவர்களில் அப்பு, சிருகண்டன் என்ற இரண்டு இளைஞர்களும் இருந்தனர். அவர்கள் இருவரும் இணைபிரியா நண்பர்கள்.

மற்றும் அபூபக்கரும் வழக்கில் மாட்டப்பட்டார் அவர் ஒரு பீடித்தொழிலாளி. தலைச்சேரி பீடித்தொழிலாளர் சங்கத்தின் முன்னணி வீரர். பீடி சங்கத்தின் தொண்டர் படையில் பயிற்சி பெற்று கம்யூனிஸ்டு கட்சி உறுப்பினருமாகி—சொந்த ஊரான கய்யூருக்கு வந்து, விவசாயிகள் சங்கத்தின் தொண்டர் படையில் கேப்டனுமானார். மற்று விவசாயத் தொழிலாளியான—குன்ஹம்பும் கொலை வழக்கில் மாட்டப்பட்டார்.

## தலைவர்கள் சந்திப்பு

கொலைக் குற்றம் சாட்டப்பட்டு நால்வருக்கும் மரண தண்டனை வழங்கப்பட்டது.

தீர்ப்பைக் கேட்டதும் கேரளம் மட்டுமல்ல, தமிழ் நாட்டிலும், இந்தியாவின் எல்லா மாநிலங்களிலும், "கய்யூர் தோழர்களை விடுதலை செய்!"—என்ற முழக்கொழி எதிரொலித்தது.

கண்ணனூர் சிறைச்சாலையில் இருந்த கய்யூர் தோழர்களை அப்போதைய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் பி சி ஜோஷியும், பி சுந்தரய்யாவும், காலஞ்சென்ற பி கிருஷ்ணபிள்ளையும் கய்யூர் வி வி குன்ஹம்புடன் சேர்ந்து சென்று பார்த்தனர். பார்த்துப் பேசிவிட்டு வெளியில் வந்ததும், "மரணக் கயிற்றை எதிர் நோக்கியிருக்கும் அவர்களுக்கு ஆறுதல் கூறச் சென்ற நாங்கள், தளதளத்து இடிந்து போனோம். எங்களுக்குதான் அந்த வீரசிகாமணிகள் ஆறுதல் கூறி அனுப்பினார்கள்" என்று கூறினர்.

## தூக்கிலிடப்பட்டனர்

இந்தியா முழுவதும் எழுந்த மக்களின் கோரிக்கைக்கு அன்னிய ஆட்சியாளர்கள் செவிசாய்க்கவில்லை.

தூக்கிலேற்றி கொன்றேபோட்டனர்

கய்யூர் தோழர்களின் தியாக நெருப்ப கேரளநாடு முழுவதும் கிராமம் தவறாமல் பற்றிப்படர்ந்து, விவசாய இயக்கத்துக்கு வேகமும் விசையும் அளித்தது.

இந்திய நாட்டின் விவசாய இயக்கத்தில் கேரள மாநிலம் முன்னணியில் நிற்கின்றதென்றால், கய்யூர்த்தியாகிகளைப் போன்ற பல தியாகிகளின் ஜீவரத்தத்தில் உயிரும் உணர்ச்சியும் பெற்றதுதான் காரணமாகும்.

கய்யூர் தியாகிகள் நாமம் வாழ்க!

கய்யூர் தியாகிகளின் காலஞ்சென்ற வரலாற்றினை தோழர் வி, வி குன்ஹம்பு எழுதியுள்ளார். அது மலையாளத்தில் புத்தகமாக வெளிவந்துள்ளது.

தோழர் இ எம். எஸ். நம்பூதிரிபாட், அப்புத்தகத்துக்கு நல்லதோர் விமர்சனமும் எழுதியுள்ளார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

### சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி மாநாடு

# அரசியல்—தத்துவம், கலை, இலக்கியம் நிறைந்து சிறந்து விளங்கிய விழாக்கோலம்

## கோவை நகரைக் குலுக்கிய இளைஞர் பேரணி

கோவை மாவட்டத்தில் துடிதுடிப்பும், சுறுசுறுப்பு மிக்க பல ஆயிரக்கணக்கான வாலிபர்களை ஸ்தாபன ரீதியாக திரட்டி, இயக்கங்களில் ஈடுபடுத்தி தமிழகம் முழுவதும், வாலிபர் ஸ்தாபன அமைப்பை ஏற்படுத்தும் அவசியத்தை தூண்டிவரும் கோவை — நீலகிரி மாவட்ட சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணியின் 2 வது மாநாடு கோவையில் மார்ச் 29, 30 தேதிகளில் நடந்து தமிழக வாலிபர் சமுதாயத்திற்கு புதுப்பாதை காட்டியது என்று சொன்னால் மிகையாகாது.

மாவட்டம் முழுவதும் திருப்பூர், ஈரோடு, சத்தி, உடுமலை, பவானி' சென்னிமலை, கோவை நகரம், சிங்காநல்லூர், கோவை புறநகர் பகுதி முழுவதும, நூற்றுக் கணக்கான இடங்களில் மாநாட்டு விளம்பரம் சுவர்களில் எழுதப்பட்டிருந்தது. ஏராளமான தட்டிகள் பெரிய பெரிய, பேனர்கள் மூலமும் சினிமா தியேட்டர்களில், சிலைடுகள மூலமும், 5 வண்ணங்களில் 5 அடி நீளத்திலும், 2 அடி அகலத்திலுமான ஆயிரம் வால்போஸ்டர்கள் மூலமும், மாவட்டம் முழுவதும்பிரம்மாண்டமான முறையில் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது.

இம்மாநாட்டை யொட்டி, கோவை நகரம் முழுவதும், செங்தோரணங்களாலும், செங்கொடிகளாலும். வரவேற்பு வளைவுகளாலும் மிகச்சிறப்பாக அலங்கரிக்கப்பட்டு கோவை நகரமே விழாககோலம் பூண்டிருந்தது. மூலை முடுககெல்லாம், மாநாட்டைப்பற்றிய பேச்சாகவே மக்களுக்கு மத்தியில் இருநதது, அன்றுடம் கோவைக்கு வந்து செல்லும் பல்லாயிரக்கணக்கான மக்கள் மாநாட்டு அலங்காரங்களைக் கண்டு வியந்தனர். பஸ் நிலையங்களிலும்,! கடை வீதிகளிலும், செயில்நிலையத்திலும்' மககள் கூடும் இடங்களிளெல்லாம், மாநாடு பற்றியே பேச்சாக இருந்தது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித்தலைமையின் கீழ் கட்டுப்பாடும், உறுதியுமிக்க பல்லாயிரக்கணக்கான இளைஞர்படை திரண்டிருப்பதைக் கண்டு, மாற்றுககட்சியினரும ஆச்சரியமடைந்தனர்.

### பேரணி

30 ந தேதி காலையிலிருந்தேகோவையை நோக்கி, சுற்றுப்புற வட்டாரங்களில் இருந்து புற்றீசல்கள்போல், வாலிபர்படை வந்தவண்ணம் இருந்தன. மாவட்டத்தின் பலபகுதிகளில் இருந்து அலங்கரிக்கப் பட்ட டிரக்குகள் லாரிகள், சைக்கிள்கள் மூலம். ஏராளமானோர் வந்த வண்ணமிருந்தனர். மாலை 3-மணிக்கெல்லாம், ஊர்வலம் புறப்படும் இடமான 100 அடி ரோடு மைதானம் நிரம்பிவழிநதது- ஊர்வலம் புறப்படுவதற்கு முன்னரே ஊர்வலம் பாதையின், வாகனப்போக்குவரத்தை கட்டுப்படுத்தி ஒழுங்கு படுத்தும் பணியில் காவல் துறையினர் அலைமோதிக் கொண்டிருந்தனர் மாலை 3—30 மணிக்கெல்லாம். ஊர்வலத்தை ஒழுங்கு படுத்தும பணியில் சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் செந்தொண்டர்கள ஈடுபட்டனர். ஊர்வலம சரியாக 4 —30 மணிக்கு பீரங்கி முழங்குவதுபோல் மும்முறை அதிர்வேட்டுகள் முழங்க ஊர்வலம் புறப்பட்டது.

தோழர் என். வி. தாமோதரன் குழுவினரின் கிராமியககலைநிகழ்ச்சி பாடல்களுடன் ஆட்டத்தோடு, முன்னே செல்ல வாலிபர் முன்னணியின் மாவட்டச் செயலாளர் தோழர் கே. சி கருணாகரன் தலைவர் தோழர் ஜி காளியப்பன். பொருளாளர் தோழர் ஆர், பாலகிஷ்ணன் ஆகியோர் தலைமையில், 500 செந்தொண்டர்கள் அணிவகுக்க பாலர்கள் மாதர்கள் பின் தொடர பல்லாயிரககணக்கான வாலிபர்கள் இடியோசையோ பீரங்கியோ' என வியக்கும் வண்ணம், முழங்கிக் கொண்டு பேரணி புறப்பட்டது.பேரணி 100 அடி ரோடில்இருந்து புறப்பட்டு கிராஸ் கட் ரோடு வட் கோவை, மேட்டுப்பாளையம் ரோடு, ரங்கே கவுண்டர்வீதி மில் ரோடு வழியாக மேம் பாலம கடந்து, அனுப்பர் பாளையம், காட்டூர், ராம்நகர் வழியாக வழியாக ஜெயில் ரோடு வந்து காந்திபுரம் ஸ்டாலின் திடலை அடைந்தது.

'உழைப்பாளி மக்களின் வீரமிக்க வாலிபர் படையின் அணிவகுப்பை காண வீதிகளின் இருபுறங்களிலும், கைக்குழந்தைகளுடன் பெண்களும் பாலர்களும், அனைத்துப்பகுதி மக்களும், வெகுநேரம் கால் கடுக்க காத்துக் கொண்டிருந்தனர் தங்கள் பகுதியில் அணிவகுப்பு வந்தபோது, மகிழ்ச்சி ஆரவாரத்தோடு, பேரணியை வரவேற்றனர் பேரணியில் முழங்கப்பட்ட அர்த்த புஷ்டியுடன் கூடிய கோஷங்கள் அனைத்தும் பகுதி மக்களையும் கவர்ந்தது

பேரணி சென்றபாதை மட்டுமல்ல, நகரத்தின் போககுவரத்தே முழுமையாக ஸ்தம்பிததுவிட்டது.

குறிப்பிட்ட ஓர் இடத்தை கடக்க சரியாக 65 நிமிடங்களாயின மொத்தத்தில் பேரணி அனைத்துப்பகுதிமக்களிடத்திலும் புத்துணர்ச்சியை ஏற்படுத்தியது

### மாநாடு

29 ந்தேதி காலை சரியாக 10 மணிக்கு சிவப்புக் கொடியில் வெள்ளை நட்சத்திரம் பொறிக்கப்பட்ட வாலிபர் முன்னணியின் செங்கொடியை பொதுச் செயலாளர் கே. சி. கருணாகரன் பலத்த கோஷங்களுக்கிடையே ஏற்றிவைத்த பின் தொழிலாளிவர்க்கம் உரிமைகளுக்காகப் போராடியும் கொடிய போலீஸ். ரௌடித்தாக்குதலுக்குள்ளாகியும், உயிர் நீத்த தியாகிகளுக்கு செங்கொடி மறவர்களுக்கு எழுப்பப்பட்ட நினைவு ஸ்தூபிக்கு பிரதிநிதி பார்வையாளர் தோழர்களும் அஞ்சலி செலுத்தினர்.

மாவட்டப்பொருளாளர் தோழர் ஆர். பாலகிருஷ்ணன அனைவரையும் வரவேற்று வரவேற்புரைநிகழ்த்தியபின் மாவட்டத்தலைவர் தோழர் ஜி காளியப்பன் தலைமையில் சரியாக காலை 10—15க்கு மாநாடு துவங்கியது மாநாட்டில் கிளைக்கு ஒரு பிரதிநிதி வீதம் 95 பிரதிநிதிகளும், வட ஆற்காடு, நெல்லை, குமரி, திருச்சி சேலம்,மதுரை ஆகியமாவட்டங்களிலிருந்து 20 சகோதரப் பிரதிநிதிகளும் சகோதர சங்க பிரதிநிதிகள் 45 பேரும் பார்வையாளர்கள் 680 பேரும் தொண்டர்கள் 60பேருமாக 900 பேர்கலநது கொண்டனர்

### அறிக்கை

வாலிபர் முன்னணியின் 2 ஆண்டு கால நடவடிக்கைகள் இயக்கங்கள், நிறை, குறைகள் படிப்பினைகள் எதிர்காலக் கடமைகளுக்கான ஆலோசனைகள் தேசிய-சர்வதேசிய அரசியல் நிலைகள் உள்ளடங்கிய வேலை அறிக்கையை பொதுச் செயலாளர்தோழர் கே. சி கருணாகரன் சமர்பித்தார் அறிகையின் மீது (தாலுகாவாரியாக) தோழர்கள் சக்திவேல். நெல்சன், காளியப்பன் ஏ. ஜி, சுப்ரமண்யம் வட ஆற்காடு இளங்கோ ஆகியோர் விவாதத்தில், பங்கேற்று செழுமைப்படுத்தினர்கள் பொதுச் செயலாளர் கே. சி. கருணாகரன் தொகுப்புரைக்குப் பின் அறிக்கை ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டது.

1973—74 ம் ஆண்டுக்கான வரவு செலவுகணக்கை பொருளாளர் தோழர் ஆர்,பாலகிருஷ்ணன் சமர்ப்பித்தார். வரவு —செலவை மாநாடு ஏகமனதாக அங்கீகரித்தது.

### புதியநிர்வாகிகள்

21 பேர் கொண்ட புதிய ஜில்லாக்கமிட்டியை மாநாடு ஒரு மனதாக தேர்ந்தெடுத்தது. மாவட்டத் தலைவராக தோழர் ஜி. காளியப்பன்' துணைத்தலைவர்களாக தோழர்கள் எம். தங்கவேலு ஆர்.சதிசுரசேகரன் பொதுச் செயலாளராக தோழர்கள் சி. மணி, என். வி. தாமோதரன், பொருளாளராக தோழர் ஆர். பாலகிருஷ்ணன் ஆகியோரைக் கொண்ட, செயற்குழுவை புதிய ஜில்லாக்மிட்டி பிரேரேபிக்க மாநாடு பலத்த ஆரவாரத்துடன் கரகோஷித்து அங்கீகரித்தது

### தீர்மானங்கள்

வியட்னாம் மக்களின் வீரப்போரை வாழ்த்தி, கம்போடிய மக்களை வாழ்த்தி, பங்களாதேஷ் மக்களுக்கு ஜனநாயக உரிமை வழங்கக்கோரி விலை உயர்வை எதிர்த்து வேலையின்மையைக் கண்டித்து வேலையற்ரோருக்கு நிவாரணம் கோரி ஜாதி. இன, மொழி பிரதேச வெறிகளைக் கண்டித்தும் இவைகளைத்தூண்டும் இயக்கங்களை தடைசெய்யக்கோரியும் தமிழகத்தில் வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் கஞ்சித்தொட்டிகளை திறக்கக் கோரியும். பழிவாங்கப்பட்ட ரெயில்வே தொழிலாளர்களைமீண்டும்வேலைக்கு எடுக்கக்கோரியும் மாநில அரசுக்குத் தேவையான வறட்சி நிவாரண நிதியை காலதாமதமின்றி கொடுக்க மத்திய அரசை வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

ஸ்தாபனம் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் முறைப்படி முடிந்தத்ற்குப்பிறகு. பல்வேறு முககிய தலைப்புக்களின் கீழ் மாநாட்டில் பங்கெடுத்த தலைவர்கள் பேசினார்கள் அதன் மூலம் இம்மாநாடு 'அரசியல். தத்துவம் கலை-இலக்கியம் ஆகியவற்றை உள்ளடக்கிய சர்வாமசம் நிறைந்த மாநாடாக இருந்தது.

### அரசியல் சொற்பொழிவுகள்

"சோசலிசமும் வாலிபர்இயக்கமும்' என்னும் தலைப்பில் இந்திய மாணவர் சங்க (எஸ்.எல். ஐ.) அகில இந்திய துணைத்தலைவர் தோழர் என். ராம் ஜனநாயக இயக்கமும் அண்ணுபிஸமும் என்னும் தலைப்பில் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்க அமைப்பாளர் கே. முத்தையா 'புதுமை எழுத்தாளனும்' வாலிபர் இயக்கமும் என்னும் தலைப்பில் கவிஞர் தோழர் கு. சின்னப்பாரதி' சீனப்புட்சியும் மக்கள் ஜனநாயகமும்' என்னும் தலைபபில் தமிழ்நாடு ஜனநாயக மாதர் சங்க துணைச் செயலாளா தோழியர் மைதிலி சிவராமன் "இன்றைய கலை உலகில் நலலதும கெட்டதும்' என்னும் தலைப்பில் திரைப்பட நடிகர் தோழர் டி. கே.பாலச்சந்திரன், 'சமுதாயப்புரட்சியில் இலக்கியததின் பங்கு' என்னும் தலைப்பில் புதுமைக் கவிஞர் தோழர் தணிகைச் செல்வன் 'சுதந்திரப் போராட்டமும் தொழிலாளி வர்க்கமும்' என்னும் தலைப்பில் தமிழக சிஐடியூ துணைத் தலைவர் தோழர் வி பி. சிந்தன் வாலிபர் இயக்கக் கடமைகள்' என்னும் தலைப்பில் தமிழக சிஐடியூ தலைவர் தோழர் கே. ரமணி தேசீய சர்வதேசிய அரசியல் மற்றும் வாலிபர் பங்கு பற்றி சிஐடியூ பொதுச்செயலாளர் தோழர் பி. ராமமூர்ததி ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

இரண்டு நாட்கள்நடைபெற்ற இம்மாநாட்டில் நிகழ்த்தப்பட்ட இச் சொற்பொழிவுகள்மட்டும் 15 மணி நேரம நடைபெற்றது. இச் சொற்பொழிவுகளில் கிடைத்த கருத்துச்செறிவு மிக்க சிறந்த அரசியல்பயிற்சியை ஏற்படுத்தும் வகையில் சிறப்பாக இருந்தது இரண்டுநாட்களிலும் சாப்பாடடிற்கான இடைவேளை தவிர மற்றநேரம் முழுவதும் மாநாட்டில் பங்கெடுத்த அத்தனை பேரும் கட்டுப்பாடாகவும், உன்னிப்பாகவும் நிகழ்ச்சிகளைக் கவனித்து குறிபுகள் எடுத்துக் கொண்டிலிருந்து, ஒரு சிறந்த எதிர்காலத் தலைமை அரசியலாக வளர்ந்து வருவதை எடுத்துக் காட்டியது.

### மாபெரும் கூட்டத்தில் தோழர் பி ஆர்

30-ந் தேதி மாலைபேரணிக்குப் பிறகு காந்திபுரம் 100 அடி ரோடு ஸ்டாலின் திடலில் தோழர் ஜி காளியப்பன் தலைமையில் 30 ஆயிரம் மக்கள் திரண்ட மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. மாநாட்டின்தீர்மானங்களை விளக்கியும் நாடு முழுவதும் வெடித்துக் கொண்டுள்ள போராட்டங்களை விளக்கியும், விலை உயர்வு, வேலையின்மை, வேலையின்மையை எதிர்த்து வாலிபர்கள் அணி திரள அறைகூவல் விடுத்தும வாலிபர் முன்னணியின் பொதுச்செயலாளர் தோழர் கே. சி. கருணாகரன் பேசியபின மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் அரசியல் தலைமைக்குழு உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி உரையாற்ற எழுந்தார் பல்லாயிரக்கணக்கானோரும பலநத கரவொலியும் வாழ்த்தொலியும் எழுப்பிதமதுஉற்சாகததை காண்பித்தனர்.

இன்றைய அரசியல் நிலைகளை மததிய மாநில சர்க்கார்களின் மக்கள் விரோத கொள்கைகளை விளக்கியும் கண்டித்தும வாலிபர் சமுதாயத்தை எதிர்நோக்கியுள்ள பிரச்சனைகளுக்கு தீர்வுகாண வாலிபர் சங்கததின் கீழ் வாலிபர்களுபமாணவர்களும அணிதிரள வேண்டிய அவசியத்தை வற்புறுத்தியும் நீண்டதொரு சொற்பொழிவாற்றினர் கூட்டத்தில் திரண்டிருநத பெரும் மக்கள் சமுததிரத்தை வெகு சிரமப்பட்டு செந்தொண்டர்கள் ஒழுங்குபடுத்தினர்.

29ந் தேதி மாநாட்டு விழாவில் 'செவ்வானம்' நாடகமும், 30ந் தேதி பொதுக்கூட்ட மேடையில் திறந்த வெளியில் 'நெஞ்சில் ஒரு கனல்' நாடகமும் துரை பீட்பிள்ஸ் தியேட்டர்சாரால், திரைப்பட நடிகர் தோழர் டி கே ராமச்சந்திரன் தலைமையில் நடைபெற்றது.

எல்லாவற்றிற்கும் மேலாக மாநாட்டு சிறப்பிற்கு சிறந்த எடுத்துக்காட்டாக, படக் கண்காட்சி அமைந்தது. இதுவரை இப்படி ஒரு படக் கண்காட்சியை நடத்தி அனுபவம் பெருத தோழர்களைக் கொண்டே. முழுக்க முழுக்க புதிதாக அனைத்துப் படங்களையும் சார்ட்டுகளையும் குறிப்புகள்) பேனர்களையும் 10 தினங்கள் இரவு—பகல் பாராது தயாரித்து கண்காட்சியை நடத்திக் காட்டிய தோழர்களை அனைவரும் பாராட்டினார்கள். பல்லாயிரக்கணக்கானோர் இக்கண்காட்சியை வியந்தனர். அனைவரும் புள்ளி விபரக் குறிப்புகளை எடுத்துச் சென்றனர்.

இரு உலகங்கள் படக் கண்காட்சி என்ற தலைப்புடன் கூடிய வரவேற்பு வளைவு முகப்பாக அமைக்கப்பட்டிருந்தது. மார்க்ஸ்—எங்கல்ஸ், லெனின், ஸ்டாலின் மா-வே ஆகியோரது படங்கள் அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தன, முதலாளித்துவ நாடுகளின் வீழ்ச்சி சோஷலிச நாடுகளின் வளர்ச்சி, இந்திய நெருக்கடி—கேலிச் சித்திரங்கள் உழைப்பாளி மக்களின் இயக்கங்களை உள்ளடக்கிய படக் கண்காட்சி அனைவரின் கண்ணையும், கருத்தையும் கவர்ந்தன.

மதுரை 'முற்போக்கு இலக்கியப் பதிப்பக'த்தர் வெளியிட்ட புதுமைக் கவிஞர் தோழா தணிகைச்செல்வனின் கவிதைத் [தொகுப்பையும், சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணி வெளியிட்ட, பொள்ளாச்சி தோழர் ப. வேலுச்சாமியின் "உயரும் கைகள் என்னும் கவிதைத் தொகுப்பையும தோழர் கே. முத்தையா அறிமுக படுத்தி கவிதைத் தொகுப்புகளிலுள்ள சில கவிதைகளைச் சுட்டிக் காட்டி, உழைப்பாளி வர்க்க நலன்களை அடிப்படையாகக் கொண்ட புதுமைக் கவிதைகளென குறிப்பிட்டார்.

தோழர் தணிகைச் செல்வன் கவிதைத் தொகுப்பை தோழர் கே ரமணியும், வேலுச்சாமியின் கவிதைத் தொகுப்பை தோழர் கே சி கருணாகரனும் வெளியிட்டு விற்பனையை ஆரம்பித்து வைத்தனர். மாநாட்டு மேடையிலேயே (ரூ 3 விலையுள்ள தணிகைச் செல்வன் கவிதைத தொகுப்பும், ரூ 2 விலையுள்ளவேலுச்சாமியின் கவிதைத் தொகுப்பும்) 800 ரூபாய்க்கு விற்பனையானது. தோழர் இ எம் எஸ் எழுதிய மார்க்சீயமும் இலக்கியமும் என்ற நூல் (ரூ. 1-50 விலையுள்ளது) சுமார் 200 பிரதிகள் வரை விற்பனையானது. இதன் மூலம் அரசியல் தத்துவார்த்த கருத்துக்களையும், கலை இலக்கிய படைப்புகளையும், வாலிபர்கள கற்றுகொள்ள, படித்து முன்னுக்கு வர. துடிப்போடும் ஆர்வத்தோடும் தயாராயிருர்கள் என்பது தெளிவாகிறது.

இவ்வாறு சிறப்பும் பெருமைமிகக இநத வாலிபர் மாநாடு சகல வழிகளிலும் வெற்றியடைய கடசியின் மாவட்டத்தலைமை திட்டமிட்டகருரான வழியை காட்டியது கோவை ஜில்லாகமிட்டியும், குறிபபாக நகரக்கமிட்டியும், தாலுகா வட்டக் கமிட்டியும் பெரு முயற்சி எடுத்துககொண்டுசிறப்பாக ஒத்துழைத்துவ அனைத்து தோழர்களும சீரிய முறையில் தொண்டாற்றினர்கள். இதேபோல் சிஐடியூ சங்கங்கள் கேட் கூட்டங்கள் நடத்தி, உண்டியல் மூலம் வசூலித்து நன்கொடையளித்தன. மாதர் சங்கம் நன்கொடை வசூலிதது கொடுத்தது பேரணியிலும் பங்கெடுத்து சிறப்பித்தது. இரவு - பகலென்று பாராமல் ஊன் உறக்கமின்றி, நூற்றுக் கணக்கான வாலிபா முன்னணி தோழர்கள், செந்தொண்டர்கள் உற்சாகத்தோடு அரும்பாடு பட்டு உழைத்தார்கள். இம்மாநாடு கோவை நகர மககளிடத்திலும், மத்தியதர வர்க்கத்தினரையும் பெரிய அளவில் கவர்ந்துள்ளதில் இருந்து மாநாட்டின் சிறப்பு உறுதியாகிறது.

## வயது முதிர்ந்த தோழர் தலைமையில் உண்ணாவிரதம்

வறட்சி நிவாரணப் பணிகளை துரிதமாக மேற்கொள்ளக் கோரி உடன்குடியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மற்றும் சிஐடியூ தோழர்கள் அண்மையில் மேற்கொண்ட உண்ணாவிரதத்துக்கு 85 வயது நிரமபிய தோழர் லட்சுமண நாடார் தலைமை வகித்தார்.

உடன்குடியில் மாதர் அணியினர் தமது பச்சிளம் குழந்தைகளுடன் உண்ணாவிரதமிருந்த காட்சி.